சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரிய நூல்

தமிழ்த்தாய் 67 - வெளியீடு

சிவபெருமான் நாரதமகாமுனிவருக்கு அருளிச்செய்த

# ஸ்ரீரங்கர் மகத்துவம்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies



"அறிவுச் செல்வங்கள் அனைத்தையும்
தமிழுக்குக் கொண்டுவர வேண்டும்.
இனிவரும் நூற்றாண்டுகளுக்கும்
அருந்தமிழை ஆற்றல் படுத்த வேண்டும்"

- மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
புரட்சித் தலைவி
அம்மா அவர்கள்

சிவபெருமான் நாரதமகாமுனிவருக்கு அருளிச்செய்த

# ஸ்ரீரங்கர் மகத்துவம்

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்
தமிழ்த் தாய் 67 - வெளியீடு

பதிப்பாசிரியர்

முனைவர் **கோ.விசயராகவன்**

எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக் குறிப்பு


| | |
|---|---|
| நூல் தலைப்பு | : ஸ்ரீரங்கர் மகத்துவம் |
| நூல் ஆசிரியர் | : சிவபெருமான் நாரதமகா முனிவருக்கு அருளியது |
| வெளியீட்டாளரும் பதிப்புரிமையும் | : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இரண்டாம் முதன்மைச் சாலை மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம் தரமணி, சென்னை - 600 113. |
| தொலைபேசி எண் | : 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : 883 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : 2015 : முதற்பதிப்பு : |
| பயன்படுத்திய தாள் | : 16 கிகி டி.என்.பி.எல்.வெள்ளை |
| நூலின் அளவு | : 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : 11 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : 72 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : 1200 |
| விலை | : ரூ. 50 (ரூபாய் ஐம்பது மட்டும்) |
| ISBN | : 978-93-85165-38-2 |
| அச்சகம் | : ராஜ் எண்டர்பிரைஸஸ் திருவல்லிக்கேணி சென்னை - 600 005. |

முனைவர் **கோ.விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

*பழங்கால அரியநூல்களையும் சுவடிகளையும் பாதுகாக்கும் வகையில் 2014ஆம் ஆண்டு நிறுவனத்தில் 34 இலட்சம் மதிப்பீட்டில் சுவடிகள் பாதுகாப்பு மய்யம் மாண்புமிகு மக்கள் முதல்வர் புரட்சித்தலைவி அம்மா அவர்களால் தொடங்கப்பட்டது. அவ்வகையில் நாடெங்கினும் உள்ள அரிய நூல்களை, சுவடிகளைத் திரட்டும் பணி தொடங்கப்பட்டு, கண்டறியப்பட்டுள்ள நூல்களைத் தமிழ்த்தாய் 67 - பெருவிழா, பிப்ரவரி 2015இல் வெளியிடும் திட்டத்தின் கீழ், 1901 ஆம் ஆண்டு வெளிவந்துள்ள இந்நூல் இப்பொழுது மீட்டுருவாக்கம் செய்யப்பெற்று வெளியிடப்படுகிறது.*

*பக்தி பரவசத்தை உணர்த்தும் நிலையில் பல சாத்திர நூல்களும் தோத்திர நூல்களும் தோன்றித் தத்தம் சமயக் கடவுளர்களைப் பற்றிய விளக்கங்களையும் அவர்கள் எழுந்தருளும் அருள்தலங்களின் சிறப்புகள் பற்றியும் எடுத்தோதி பக்தர்களுக்கு வழிகாட்டும் நிலை எழுந்தது. அவ்வண்ணம் எழுந்தனவே தலபுராணங்கள். அந்நிலையில் திருவரங்கம் என்னும் காவிரித்தலம் பற்றியும், அங்கு எழுந்தருளியிருக்கும் தென்முகம் நோக்கிப் பள்ளிகொண்டிருக்கும் அரங்கனுடைய அருள் திறத்தை இயம்புவதாகவும் ஸ்ரீ ரங்கர் மகத்துவம் என்னும் இந்நூல் அமைந்துள்ளது.*

*சிவபெருமானிடம் நாரத முனிவர் திருவரங்கத்தின் பெருமையினை அருளி மக்களுக்கு வெளிப்படுத்த வேண்டும்*

எனக் கேட்ட போழுது, அது எடுத்துரைக்கும் தரமன்று. இயன்றவரை சுருக்கமாகச் சொல்லுகிறேன் எனச்சொல்லி அருளியது இந்நூல். பதினாயிரம் ஆண்டுகள் ஆயினும் சொல்லி மாளாத பெருமையைச் சிலவாகச் சொல்லும் சிறப்பினதாக இந்நூல் அமைந்துள்ளது. கிடைத்தற்கரிய இந்நூல் ஒளியச்சு மூலம் மீண்டும் புத்துயிர் பெற்றுள்ளது.

தமிழறிஞர்களின் தமிழ்த் தொண்டினை எப்போதும் பாராட்டுவதில் முதன்மையானவர் மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் ஆவார். மாண்புமிகு அம்மா அவர்கள் தமிழ் மீதும் தமிழர் மீதும் தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி அவர்களுக்கு நன்றி.

தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஆர்வத்தோடு நாட்டம் செலுத்தித் தமிழ்த் தொண்டாற்றிவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்பான முறையில் மறு அச்சுப் பெற முனைந்து உழைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அனைத்துப் பணியாளர்களுக்கும் அச்சகத்தார்க்கும் என் நன்றி.

**இயக்குநர்**

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

சிவபெருமான்

நாரதமகாமுனிவருக்கு அருளிச்செய்த

# ஸ்ரீரங்கர் மகத்துவம்.



இஃது
சென்னைப்புரசை:
நாராயணசாமிப்பிள்ளையவர்களது
நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1901.

16, சரவணப்பெருமாள்முதலிவீதி, புரசை, சென்னை.

MADRAS.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# விளம்பரம்.

இதனால் சகல புண்ணிய சீலருக்கும் அதிவிநயத்துடன் அறிவிப்பதென்னவெனில்:

இப்புத்தகமும் இன்னும் பலவித தமிழ், தெலுங்கு, கிரந்தமுதலிய புத்தகங்களும் விலைக்குத் தயாராயிருப்பதால், வியாபாரிகள்முதல் பலரும் மொத்தமாகவும், சில்லரையாகவும் அடியிற்கண்ட என்னிடத்தில் நேராகவும், வால்யுபேபில் போஸ்ட் மூலமாகவும், ரெயில் மார்க்கமாகவும், கப்பல் வாயிலாகவும் மிக்க சகாயமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்.

வெளியூர் வியாபாரிகள் பட்டியுடன் பணமும், சரியான மேல்விலாசமும் அனுப்பினால் உடனே தடையின்றி கிரமப்பிரகாரம் சரக்கு அனுப்பப்படும்.

நிற்க, இவ்வச்சியந்திரசாலையில் புத்தகம் அச்சிடல், திருமணப்பத்திரிகை, திருவிழாவிபவப் பத்திரிகை, ஸ்ரீமந்தமுகூர்த்தப்பத்திரிகை, விளம்பரம், டோல்கேட் பில், பட்டா, முச்சிலிக்கைமுதல் பலவிதவேலைகளும், சார்ஜ் குறைவாகவும், வேலை அழகாகவும் செய்துகொடுக்கப்படுமாதலால் அச்சுவேலையையுடைய அன்பர்கள் கருணைகூர்ந்து அடியிற்கண்ட என்னிடத்திற் கொடுப்பீர்களெனக் கோருகின்றனன்.

இங்ஙனம்:

☞ பு. நாராயணசாமிப்பிள்ளை,

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலை,

16, சரவணப்பெருமாள்முதலிவீதி, புரசை, சென்னை.



ஸ்ரீ



ஸ்ரீரங்கநாதாயநம:

# ஸ்ரீ ரங்கமகத்துவம்.



## காப்பு.

வெண்பா.

திருவரங்கமென்று தியானிக்கினேய்போம்
கருவரங்கமெய்தாக் கருதும்—பெருவரங்கள்
எலலாமுஞ்சித்திக்கு மெனநான்மறையுணரும்
நல்லார்வகுப்பார் நயந்து.

நூல்வரலாறு-விருத்தம்.

அந்திநிறத்தெம்பிரான்முன்னாளி நாரதனுக்கனுக்கிரகித்து
விந்தைபெறும்ஸ்ரீரங்கமகத்துவமா மிக்கதையைவிளம்பினோரும்
சிந்தையுறப்படித்தோருங்கேட்டோரும் வரைந்தோருந்திருமணாளன்
கந்தமலர்ப்பதநிழற்கீழ்வைகுந்தத் தெந்நாளுங்களித்துவாழ்வார்.

துதிகவி.

அருமறையைக்கவர்ந்துவிரி மகரவாரிதியினிற்சென்றன்றொளிந்த
பெருவலிகொள்சோமகாசுரனுமத் தவுணனைமுன்பிறகுமீனக்
திருவுருக்கொண்டறமாய்த்தமறையையுலகிடைவிரித்துசிலர்தம்மை
பொருவிலருளிற்புரந்திவ்வரங்கத்தி லரிதுயில்செய்புனிதபோற்றி.

நூல்.

## முதலாம் அத்தியாயம்.

சகலபுவனசம்ரட்சகராகியும், சர்வசீவதயாபராகியும், காளகண்டமூர்த்தியாகியும், காமதகனராகியும், திரிபுராந்தகராகியும் திரிநேத்திரதாரியாகியும், மான்மழுதரித்தவராகியும், மனோன்மணிசமேதராகியும், சிருஷ்டி திதி சம்மார திரோபவ அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்திய கர்த்தாவாகியும், பரப்பிரம்மசொரூபராகியும் விளங்கப்பட்ட ஸ்ரீ சதாசிவமூர்த்தியானவர் ஸ்ரீகைலாசத்தில் முப்பத்துமுக்கோடி தேவகணங்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகணங்களும, நந்திரு

லாகிய அளவில்லாத சிவகணங்களும், பதினெண் சித்தகணங்களும், புடைசூழக் தக்கதாக ரத்தினசிம்மாதனத்தில் கொலுவீற்றிருக்கின்ற சமயத்தில்பராசர்-புண்டரீகர்-அம்பரீஷர்-வீஷ்மர்-தாலப்பியர்-ருக்மாங்கதர்-பிரகலாதர் - அர்ச்சுனர்-வசிஷ்டர் - மாபலி-விபீஷணர் என்று சொல்லப்பட்ட பாகவதசிகாமணிக்குள் சிரோன்மணியாயிருக்கப்பட்ட நாரதமகாமுனியானவர் ஒருநாள் அதிதீவரமாக நடந்து கயிலாயத்திற்குப்போய் சாம்பசிவமூர்த்தியைக்கண்டு பிரதட்சண நமஸ்காரஞ்செய்து அஞ்சலிபஸ்தராய் நின்றுக்கொண்டு, ஓய்சுவாமி! தேவரீர் முன் அனுக்கிரகஞ்செய்தருளிய புண்ணிய சரித்திரங்களினால் சொர்க்கமத்திய பாதாளமென்னும் திரிலோக விருத்தாந்தங்களுந்தெரிந்து பூலோகத்திலுள்ள புண்ணியஸ்தல மகத்துவங்களும் மூர்த்தி மகத்துவங்களும் கங்கைமுதலான தீர்த்தமகத்துவங்களும் மூகீஸ்வரர்களுடைய புண்ணியசரித்திரங்களும் அடியேனறிந்து கிருதகிருத்தியனானேன். ஆனால் தேவரீர் சோழதேசத்துள்ள காவேரிமகத்துவத்தைத் திருவாய்மலர்ந்தருளிய காலத்தில் பூலோகத்திலுள்ள விஷ்ணுதலங்களுக்குள் ஸ்ரீரங்கஸ்தலமென்று ஒரு திவ்வியஸ்தல மிருக்கின்றது அந்தஸ்தலமகத்துவம் சகஸ்ரபணாமுடிகளையும் இரண்டாயிரம் நாவையுமுடைய ஆதிசேஷனாலும் நம்மாலுஞ்சொல்லி முடியாதென்று தேவரீர் திருவுளம்பற்றியருளிய வசனாமிர்தத்தைச் செவிவழியாகவுண்டு திருப்தியடையவேண்டுமென்று அன்றுமுதலின்றையவரையில் அதிதாகமாயிருக்கின்றது: ஆதலால் அடியேனுக்கு இன்னமொருதரம் அந்த ஸ்தலமகத்துவமும் மூர்த்திமகத்துவமும் தீர்த்தமகத்துவமும் விசிதமாகத்தெரியும்படி அனுக்கிரகம் செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துக்கொண்டனர்.

அதுகேட்டுச் சிவபெருமான் சந்தோஷசித்தராய் அந்த நாரதமுனிவரைப்பார்த்து ஓய்நாரதமுனிவரே அந்தத் திவ்வியஸ்தலமகத்துவத்தை நம்மால் சொல்லிமுடியாதென்று முன்னமே சொல்லியிருந்தோமே ஆயினும் நம்மாலியந்தமாத்திரஞ் சொல்லுகின்றோம், விசேஷமாகச் சொல்லவேண்டுமாகில் பதினாயிரந்தேவவருடங்கள் செல்லும்; உம்மாலுங் கேட்டுமுடியாது; எம்மாலுஞ்சொல்லி முடியாது ஆதலால் சங்கிரகமாகச் சொல்லுகிறோம் நீர் கேட்பீராகவென்று பரமசிவன் திருவுளம்பற்றி யருளுகின்றார். ஓய் நாரதமுனிவரே! சோழதேசத்தில் காவேரிமத்தியில் சந்திரபுட்கரணி தீர்த்தத்தில் மகா லட்சுமிகரமாயிருக்கப்பட்ட ஸ்ரீரங்கஸ்தலமென்கிற ஒரு புண்ணிய ஸ்தலமுண்டு அந்த ஸ்தலத்திற்குப்போனவர் நரகத்தைப்பார்க்கவேண்டுவதுமில்லை, எமலோகத்திற்குப் போகவேண்டுவதில்லை, அவர்களை மரணவேதனை வருத்தவுமாட்டாது, மறுபடியும் அவர்கட்குப் பலவகைப்பட்ட பிறவித்துன்பங்கள் நேரிடாது. ஆகை

யினால் பூமண்டலத்தில் புத்திசாலிகளாய் இருக்கின்றவர்கள் ஸ்ரீரங்கத்துக்குப் போகாமலும் காவேரிதீர்த்த ஸ்நானஞ்செய்யாமலும் ரங்கவிமானத்தை தரிசிக்காமலும் ஸ்ரீரங்கநாயகரைச் சேவைசெய்யாமலும் தங்களாலியன்றமாத்திரம் அதிதிகளாகிய பெரியோர்களுக்கு தானதருமங்கள்செய்யாமலுமிருக்கமாட்டார்கள். அதுவுமல்லாமல்தும்முகிறபோதும் நடக்கும்போதும் இருமுகின்றபோதும் கொட்டாவிவிடுகிறபோதும் எச்சிலுமிழ்கின்றபோதும் சரீரத்தில்ஒருவியாதிநேரிட்டபோதும் பாவிகளோடு சவகாசஞ்செய்யும்போதும் ஒருபொய்வார்த்தைசொல்லுகிறபோதும் பாவிகளை யனுசரித்துப்பேசும்போதும் மனோவாக்கு காயமென்னுந்திரிகாணசுத்தியாய் ஒருதரம் ரங்காவென்று தியானித்து வசனித்தால் அவர்களுக்கு ஒருஅபாயமுண்டாகாது அல்லாமல் இரண்டுதரம் ரங்காவென்றுதியானித்தால் அவர்முற்பிறப்பிற்செய்துள்ள பாவவினைகளெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல நீங்கிப் புண்ணியசாலிகளாவார்கள் அல்லாமலும் அவர்களைச் சந்தசாகரஞ்சூழ்ந்த உலகமெல்லாங்கொண்டாடும்.

பின்னரும் ஆயிரம்யோசனைதூரத்திலிருக்கிறவனானாலும் அந்த ஸ்தலத்தை நினைப்பானாகில் அந்த மகாபுருஷனும் அவன் வமிசத்தில் இருபத்தொருதலைமுறையிலுள்ள பிதிர்களும் பூர்வசென்மத்தில்செய்துள்ள சகல பாவங்களும் நீங்கிப் புண்ணியவான்களாவார்கள் எந்தத் தேசாந்தரத்திலிருக்கிறவனானாலும் அந்த மகத்துவமாகிய இரங்கஸ்தலமிருக்கின்ற திசையைநோக்கி இரண்டுகைகளையுஞ் சிரசின்மேல் அஞ்சலியாகவைத்துக் கும்பிட்டு இரங்காவென்று தியானஞ்செய்வானாகில் அவன் ஒருகாலத்திலும் பாவத்தையடையமாட்டான் அதுவுமல்லாமல் சந்திரபுட்கரணிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து செபதபவனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஏகமனதாய் நின்று இரண்டுகைகளையுங்கூப்பி இரங்காவென்றுசொல்லிக் கூப்பிட்டானானால் அவன் ஒருபோதும் பாவத்தையுடையமாட்டான்.

இதுவுமல்லாமல் ஏகாதசிவிரதம் நிட்சயமாயிருந்து துளசிதீர்த்தஞ்சாப்பிட்டு அன்றிராத்திரிமுழுதும் அந்த பகவானுடைய கீர்த்தனைகளை பாராயணஞ்செய்கின்ற பரமபாகவதர்களின் பெருமையை இவ்வளவென்றளவிட்டு எவர்களாலுஞ்சொல்லிமுடியாது அவர்களையே ஸ்ரீமந்நாராயணமூர்த்தியென்றறிந்து அவர்களுக்குச் சிசுவிடைசெய்து எக்காலமும் வணங்கவேண்டும்.

பிதிர்தேவதைகளில் ஒவ்வொருவரும் தங்களுக்கு புண்ணிய லோகப் பிராப்தியுண்டாக்குவிக்கும்படி தங்கள் வமிசத்தில் ஒருசற்புத்திரன் பிறக்கமாட்டானா அவன் வித்தைபுத்தியறிந்தவனாகி இரங்கஸ்தலத்திற்குபோய் காவேரியில் ஸ்நானஞ்செய்து இரங்கநாயகியார் சமேதராய் ஆழ்வார்கள்முதலிய தாசகூட்டங்கள் புடைசூழ்ந்து சேவிக்கத்தக்கதாக ஆதிசேஷசயனத்தில் திருக்கண்வளர்ந்தருளுகின்ற இர

ங்களைச்சேவித்து பிறகு ஒரு பிராமணனுக்காகிலும் அன்னங்கொடுக்கமாட்டானா அதற்கு சக்தியில்லாவிட்டாலும் ஒரு காசாகிலுங்கொடுக்கமாட்டானா அதுவும் நேரிடாவிட்டாலும் திலதர்ப்பணமாகிலும் பண்ணமாட்டானா அதுவுங்கிடையாவிட்டாலும் ஒருபிடிபுல்லாகிலும் பிடுங்கி ஒரு பசுவின்வாயிற் கொடுக்கமாட்டானாவென்று நினைத்துத் தவஞ்செய்வார்கள்.

ஓய்நாரதரே! இதுவுமல்லாமல் எம்புரத்தில் வாசஞ்செய்கின்ற எமதர்மராசனானவன் தன்னுடையதொழில் குறைவுபட்டு தன்னதிகாரமடங்கிப்போய் நரகம் பாழாய்க்கிடக்கிறபடியினால் ஒருநாள் அவன் ஏகாந்தமாயிருந்து ஆலோசித்ததாவது என்னவென்றால் ;—

பூலோகத்திற் பிறந்திருக்கப்பட்ட சகல மனிதர்களும் ஸ்ரீரங்கத்துக்குப்போகவேணுமென்று நினைத்தமாத்திரத்திலேயே அவர்கள் செய்தபாவங்களெல்லாம் பஞ்சாய்ப்பறந்துபோய் நம்முடையலோகத்திற்கு வாராமல் புண்ணியலோகத்தையடைகின்றபடியால் இனி நம்முடைய ஆக்கினை எங்கே செல்லப்போகின்றது நம்முடைய அதிகாரத்தை யாரிடத்தில் செலுத்தப்போகின்றோம் தேவர்களோவென்றால் பூலோகத்திற்குப்போய் இரங்கஸ்தலத்தில் மனிதராகப்பிறக்கவேண்டுமென்று சார்வதாபிரார்த்திக்கின்றார்கள்.

புரட்டாசிமாசம் கிருஷ்ணபட்சத்திரியோதசியில் அந்த ஸ்தலத்திற்குப்போய் பிதிர்த்தர்ப்பணம் பண்ணினபலத்தினால் அவனுமவன் வம்சத்திலுள்ளவர்களும் பாபவிமோசனர்களாய் பரமபதத்தையடைகின்றார்கள்.

மார்கழிமாசமுழுதும் அந்தக் காவேரியிலும் சந்திரபுஷ்கரணியிலும் ஸ்நானஞ்செய்து ஏகமனதாய்நின்று இரங்கநாயகரையும் பரமபாகவதர்களாகிய தாசகூட்டங்களையுஞ்சேவித்தால் அவனும் அவன்குலத்திற்பிறந்தபேர்களும் கிருதகிருத்தியர்களாய் பிறவிக்கடலை நீந்தி மோட்சக்கரையிற் சேருகின்றார்கள்.

ஆடிமாதம், ஆவணிமாதம், புரட்டாசிமாதம், ஐப்பசிமாதமாகிய இந்த நான்குமாதங்களும் அந்தஸ்தலத்திலேயே வாசமாயிருந்து அந்தத்தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணுவார்களாகில் அவர்கள் மகத்துவத்தை இன்னபடியென்று எவர்களாலுமளவுபடுத்திச் சொல்லிமுடியாது. இதற்குவேறாகிய அனேக திவ்வியஸ்தலங்களில் சகஸ்ரவருஷஞ் சரியாய்வாசம்பண்ணி தவஞ்செய்தவனுக்கு எந்தப் புண்ணியபலமுண்டாகுமோ அந்த புண்ணியபலமெல்லாம் இந்தத் திருவரங்கமென்னும் திவ்வியஸ்தலத்தில் ஓரிராத்திரி வாசம்பண்ணினவனுக்கு அத்தட்சணமே பலிக்கும் அதுவுமல்லாமல் அந்த தலத்திலிருந்து ஆயிரங்கோடி மகாபாதகங்களைச் செய்தபோதிலும் அவர்கள் நமது எமபுரத்து வாசற்படியை மிதிக்கிறதில்லையென்று வெகுவாய் விசாரமடைந்தான்.

கேட்டீரோநாரதமுனிவரே இன்னமொரு அதிசயமுண்டு அதனையுஞ்சொல்லுகின்றோம் அதெப்படியென்றால்: எவனாகிலும் இரங்கயாத்திரைபோகிறேனென்று சொல்லுவானானால் அவனைக்கண்டுபிடித்து அவனுக்குவுபசாரமாய் ஒருவேளை அன்னங்கொடுத்தால் அப்படிக் கொடுத்த புண்ணியபுருஷன் பூலோகத்திலுள்ளவரையில் தனதான்ய வாகன சம்பத்திற்குறைவில்லாதவனாய் புத்திரமித்திர களத்திராதிகளோடு சகலபோகங்களையனுபவித்து வெறுத்து முடிவில் பரமபாகவதனாய் திவ்யசரீரத்தைப்பெற்று சூரியமண்டலத்தை பேதித்துக்கொண்டுபோய் விரசாநதிக்கு அக்கரையாகிய ஸ்ரீவைகுந்தத்தில் நித்தியசூரியர்களோடு சதாகாலமுமழிவில்லாத சுகத்தை யடைந்திருப்பான் இன்னமும் அந்தத்தலத்தைச் சேவித்தபேர்களுக்கு, ஒருநாள் தப்பாமல் நாளொன்றுக்கு மூன்றுதரம் பெரியோர்களுக்குப் பாத்திரதானம்பண்ணினவனுக்கு எந்தப் புண்ணியபலன்சித்திக்குமோ அந்த புண்ணியபலன் சித்திக்கும்.

அந்தஸ்தலத்திற் சொர்ணதானங்கொடுப்பதே விசேஷம், இல்லாவிட்டால் அதைப்பார்க்கிலும் பூதானம் கோதானம் வஸ்திரதானமுதலான மகாதானங்களை பிராமணர்களுக்குக்கொடுக்கின்றது மிகவுமுத்தமம். அதுவுமல்லாமல் அந்த மகாதலத்தில் வாசமாயிருந்து பெருமாளுக்குப் பக்தனாயிருக்கிறவர்கள்கையில் ஒரு சொம்புசலம் காவேரிதீர்த்தத்தில் மொண்டுகொடுப்பார்களாகில் மேற்சொல்லிய தானங்களைப்பார்க்கிலும் மகாவிசேஷம் எந்தத்தீர்த்தங்களில் எந்தநதிகளில் முழுகினபோதிலும் காவேரியையும் சந்திரபுட்கரணியையும் மனதில் தியானித்து முழுகவேண்டும். மற்றநதிகளைத் தியானஞ்செய்தாலும் தியானஞ்செய்யாவிட்டாலுங்குற்றமில்லை இந்தக்காவேரியையும் சந்திரபுட்கரணியையுந் தியானிக்கிறபுருடன் எக்குலத்திற் பிறந்தவனாயிருந்தபோதிலும் அவனிடத்தில் பெருமாள் பரமப்பிரீதியாகயிருப்பார்.

இதுவல்லாமல் பெருமாள் ஒருகாலத்தில் இந்த மாயப்பிரபஞ்ச சம்சாரவாழ்க்கையில் வலையிலகப்பட்ட மான்போலகப்பட்டுநின்று மோகத்தில்தடுமாறுகின்ற சீவராசிகளைப்பார்த்து சில்வசனங்கள்சொல்லியிருக்கின்றார், அதென்னவெனில்: நீங்கள் இந்த மாயாசம்பந்தமான சம்சாரபந்தத்தைவிட்டு பிறவிக்கடலைநீக்கி மோட்சத்தைச்சேரவேண்டுமானால் நமது துவாதசநாமங்களையுந்தியானித்து அஷ்டாட்சரமந்திரத்தைச்செபித்து இரங்கஸ்தலத்திற்காவேரிஸ்நானம்பண்ணுங்கோள் இல்லாவிட்டால் வெறுஞ்சலத்தையாகிலுமொண்டு பிராமணர்களுக்குக் கொடுங்கோள் அதனால்புண்ணியசாலிகளாவீர்கள் அதுவுமல்லாமல் எவனாகிலும் இரங்கஸ்தலவாசிகளாகிய நம்மையும் சந்திரபுட்கரணியையும் காவேரிதீர்த்தத்தையும் பெற்ற தாயுந்தகப்பனையும் குருவையும் நிந்திப்பானாகில் அவன் பிராமணனாயிருந்தபோதிலும் நீச்சனாய்ப் பிறந்து ரவுரவாதி நரகத்தையடைவான் நீசனாயிருந்த

போதிலும் அவன் நம்மிடத்தில் பக்திவிசுவாசமுள்ளவனாயிருந்து அஷ்டாட்சரத்தைத் தியானஞ்செய்வானாகில் அவனே நமக்கு அதிபக்தனாய் விளங்குவான்.

மகாராசனாகப்பிறந்து தருமநீதிகள்தவறி பக்தி விசுவாசமில்லாமல் எந்நேரமும் இடைவிடாமல் அஷ்டாட்சரதியானம் செய்தபோதிலும் அவன் நமக்கு தாசனாகமாட்டான் அவனுக்கு பரமபதங்கிட்டாது அவனுக்கு நரகமே பிராப்தியாகுமென்று திருவுளம்பற்றியருளினார். கேட்டீரோ நாரதமுனிவரே! பின்னையும் நதிக்குள்மேன்மையுடையது காவேரிநதியும் விஷ்ணுபக்தருக்குள் சிரேஷ்டமானவர் நீரும் தேவதைகளுக்குள் மேலானவர் விஷ்ணுவும் வேதங்களுக்குள் விசிஷ்டமானது பிரணவமும் எப்படியோ அப்படிபோல பூலோகத்துள்ள புண்ணியக்ஷேத்திரங்களில் மகிமைபொருந்தியது இரங்கஸ்தலம் ஆதலால் அந்தஸ்தலத்தில் விவேகிகளாயிருந்து வாசஞ்செய்தபோதனுக்குக் கோஹத்தி சிசுஹத்தி பிரம்மஹத்தி ஸதிரீஹத்திமுதலான சகல தோஷங்களும் நிவாரணமாகும் அல்லாமல் கள்ளுண்டல் திருடுதல் அசத்தியங்கூறுதல் கொலைசெய்தல் பரதாரகமனம்பண்ணுதலென்று சொல்லப்பட்ட குரூரமாகிய பஞ்சமகாபாதகங்களும் பறந்துபோகும் அவர்கள் வமிசத்தில் மூவேழு தலைமுறையிலுள்ள பிதிர்க்களும் நரகத்தைவிட்டு நீங்கி புண்ணியலோகத்தைப்பெறுவார்கள்.

ஆகையால் சார்வதா பாவகிருத்தியங்களையே செய்து அருந்தல் பொருந்தலே பரமாகநினைத்துத்திரிகின்ற பாமரசனங்களைப்பார்த்து ஓய் பாபிஷ்டர்களே நீங்கள் ரங்காரங்காவென்று சொல்லுங்கோள் இரங்கயாத்திரைசெய்யுங்கோள் காவேரியில் ஸ்நானம்போய் முழுகுங்கோள் உங்கள் பாவகர்மங்களெல்லாம் விடுதலையாகுமென்று புத்திசாலியானவன் காருண்ணியமாகச் சொல்லவேண்டும் அப்படி சொல்லுகின்றவார்த்தையைச் செவிகொடுத்துத் திருமந்திரம்போல் நினைத்து பயபக்திவிசுவாசத்துடனே கேட்டபேர்களுக்கு அவர்கள் மனமறிந்து செய்தபாவங்களும் அந்தட்சணமே நீங்கி பரமபாகவதரானார்கள்.

அல்லாமலும் நாம் இப்போது உமக்குச்சொன்னபுண்ணியகதையாகிய இரங்கமகத்துவத்தைக் கிரமமாகவெழுதி விஷ்ணுபக்தர்களுக்குக்கொடுத்தவன் அயிஸ்வரியனாவதுமன்றி தேகாந்தத்தில் புண்ணியலோகத்தையும்பெறுவான். பிறகு அவன் அந்ததலத்தில் புண்ணியவானுடையவயிற்றில் பிள்ளையாகப்பிறந்து புத்திசாலியாய் இரங்கநாயகரைச்சேவித்துக்கொண்டு புண்ணியபுருஷனாயிருப்பான்.

இந்தச்சரித்திரத்தைப் பயபக்தியிசுவாசத்துடனே படித்தபேரு க்கும் கேட்டபேருக்கும் வித்தையும புத்தியும சீர்த்தியும ஐசுவரிய மும் சந்தானசம்பத்தும் தீர்க்காயுசும உண்டாகும இதுவுமல்லாமல் அமாவாசை நவமிதிதி பௌர்ணமி திதி துவாதசி அஷ்டமி ஏகாதசி இப்படிப்பட்ட புண்ணியதினங்களில் இந்த புண்ணியகதையைப் படி த்தபேர்களும் விசுவாசமாக கேட்டபேர்களும் பூலோகத்திலுள்ள சகல போகங்களையும் சுகசீவிகளாயனுபவித்துப் பின்பு தேவர்களாக ப்பிறந்து தேவபோகங்களையனுபவித்து வெறுத்து முடிவில் ஸ்ரீவை குந்தத்தில் நித்தியாயிசுவரியர்களாய் பிரகாசிப்பார்களென்று பரம சிவன் திருவுளம்பற்றியருள அதுகேட்டு நாரதபகவானும் அப்படியா வென்று ஆச்சரியமடைந்து மவுனமாயிருந்தார்.

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.



ஸ்ரீரங்கநாதாயநம:.

## இரண்டாம் அத்தியாயம்.



துதிகவி-விருத்தம்.

அலையெரியும்பாற்கடலின் மத்தாகப்பொன்மலையையமைத்துவானக்
கலைமதியைத்தாக்கிவாசுகிாக யத்தாவைக்கயிறுப்பூட்டி.
புலவர்குழாங்கடைபொழுதம் மலைகடலிலழுத்தாகற்புகழுவாமை
நிலவுருக்கொண் டருள்புரிந்திவ் வரங்கத்திற்கண்வளரும் நெடியோய்
[போற்றி.

பிறகு நாரதபகவானுனவர் எழுந்து ஸ்ரீகயிலாசபதியாகிய பர மேஸ்வரருக்குச் சாஷ்டாங்கதெண்டஞ்சமர்ப்பித்து இரண்டுகைகளை யுஞ் சிரசின்மேல்வைத்துக் கும்பிட்டுநின்று ஓய்சுவாமி, திரிபுராந் தகா, தீனரட்சகா, பார்வதிசமேதா, பரமதயாளாவென்று பலவாறுகத் தோத்திரஞ்செய்து தேவரீர் இப்போது அனுக்கிரகஞ்செய்தருளிய புண்ணியசரித்திரத்தைக்கேட்டுச்சந்தோஷித்தனுகினேன் அதிற்சமு சயமில்லை ஆனாலும் இன்னமும் அந்த சரித்திரத்தையே கேட்கும்படி ஆசையாயிருக்கின்றது ஆகையால் அந்தஸ்தலத்தில் ஸ்ரீரங்கவிமான மும் ஸ்ரீரங்கவிக்கிரமும் சந்திரபுட்கரணியும் எப்படி யுண்டாச்சுதோ அந்த விர்த்தாந்தத்தை அடியேனுக்கு விவரமாகத்திருவுளம்பற்றி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன் திருவாய்மல ர்ந்தருளுகின்றார்.

எப்படியென்றால் கேட்டீரோ நாரதரே அந்தத் தலத்தினுடைய பெரும்பிரதாபமும் அளவிட்டுச்சொல்லுவோமாகில் பதினாயிரந்தேவ வருஷஞ்செல்லுமென்று முன்னமே சொல்லியிருந்தோம் ஆனபோ

திலும் நீயே கேட்கவேண்டுமென்கிற ஆசையாயிருக்கிறதென்றுசொல்லுகிற முறைமையினால் இன்னம் எடுத்துக்கூறுகின்றோம் நீர் சாவ்தானமாய்க்கேளும் பூர்வத்தில் நால்வகையோனி எழுவகைத்தோற்றம் எண்பத்துநாலுலட்சம் ஜீவபேதங்களாயுள்ள சகல ச்ராசரவுயிர்களும் பிரகிருதியிலிருந்துண்டாகி மறுபடியும் அந்தப் பிரகிருதியிற்றானே லயமாகி ஒருரூபமும் தோன்றாமல் காடாந்தகாரமாயிருந்தது அப்போது மகாவிஷ்ணுவாகிய பெருமாள் ஒருவர்மாத்திரம் பிரளய கால சமுத்திரத்தில் ஒரு சிறுகுழந்தைபோல் வடபத்திரசயனித்திலிருந்து நெடுங்காலம் பரமயோக நித்திரைசெய்து அதற்குமேல் திருக்கண்விழித்துப் பார்த்தருளினார்.

அப்போது எந்தவிடத்திலுங் காடாந்தகாரமாய் ஒன்றுந்தோன்றாமலிருந்தது அதுகண்டு ஓஓ இதேது ஒரு ஜீவராசிகளையுங்காணோம் ஒருதேவதைகளையுங் காணோமென்று சற்றுநேரம் திருவுளஞ்செய்து பிறகு சகலபுவன சராசரங்களும் தம்முடைய வயிற்றில்தான் அடங்கியிருக்கின்றதென்று யோகத்திருஷ்டியினாலறிந்து சந்தோஷமாயிருந்தார் அந்தச்சமயத்தில் தேவனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய நாபிஸ்தானத்திலிருந்து ஒருதாமரைப்புஷ்பம் பிரகாசித்து நின்றது அந்தத் தாமரைபுட்பத்தின் இதழ் ஆயிரத்தெட்டுமாற்று தங்கம்போலும் அதன்கொடி நவரத்தினகசிதம்போலும் அதன்முள்ளுகள் பவளத்துண்டம்போலும் விகசிதமாயிருந்தது அந்தக்கமலத்திலிருந்து சகலலோகங்களையும் சிருஷ்டிக்கப்பட்ட பிரமதேவனுண்டாகி வெளியில்வந்தான் அப்படிவந்த பிரம்மாவானவன் நாலுதிக்கும் ஏறெடுத்துப் பார்த்தவிடத்தில் வேறொரு பிராணிகளுமில்லாமல் தான்மாத்திரம் ஒண்டியாயிருப்பதால் பயப்பிராந்தியடைந்து பிர்மித்துக்கொண்டிருந்தான் அந்தவேளையில் மகாவிஷ்ணுவானவர் குருடன் கைக்கோல்போலவும் தரித்திரன்கையிலகப்பட்ட திரவியம் போலவும் தீராப்பிணியாளனெதிர்ப்பட்ட சஞ்சீவி பர்வதம்போலவும் ஆகாசமார்க்கமாய்ச் சரேலென்று புறப்பட்டு ஒரு அம்சபட்சியாக ஆதித்தமண்டலம்போலும் மகமேருபர்வதம்போலும் பிரகாசித்துக் கொண்டு நானாவிசித்ரரூபமாய் கரகரவென்னுஞ் சத்தத்துடன் தொனித்துக்கொண்டு அந்தப்பிர்மதேவனுக்கு முன்னேவந்துநின்றார்.

அதுகண்டு பிர்மதேவன் ஆச்சரியமடைந்து அந்த அம்சரூபியைப்பார்த்து நீயாரென்றுகேட்க அந்த வார்த்தைக்குப்பதில் அம்சரூபியும் தோம்காவென்று சொல்லியருள அன்றுமுதல் தகப்பனானவன் பிள்ளைக்குப்பேரிட்டதுபோல் பிரமனுக்குத் தோம்காவென்று பேருண்டாச்சுது பிறகு அந்த அம்சரூபியான பெருமாள் பிரமதேவனைப் பார்த்து நாம் ஹரியென்று திருவுளம்பற்றியருளினார் அதுகேட்டவுடன் பிரமதேவன் சகல பயங்களுமொழிந்து சந்தோஷித்தனாய் அந்த மூர்த்திக்குச் சாஷ்டாங்கமாக தண்டன்சமர்ப்பித்து சுவாமி தேவரீர் எனக்கு என்னபுத்திகட்டளையிட்டிருக்கின்றீர் இனிநான்செ

ய்யவேண்டிய காரியமென்ன அதைத் திருவுளம்பற்றியருளவேண்டு மென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டு விஷ்ணுவாகிய அச்சுரூபி யும் சந்தோஷமாய் அந்தப்பிரமதேவரைச் சமீபத்திலழைத்து மகா அன்புடனே பிரணவமந்திரமென்கிற ஏகாட்சரத்தைமாத்திரம் உப தேசம்பண்ணி நீ இந்த மந்திரத்தைமாத்திரம் செபஞ்செய்துக்கொ ண்டிருவென்று கட்டளையிட்டு அந்தரமார்க்கமாய் மறைந்துபோய் விட்டார்.

அப்பால் பிரமதேவனும் அந்தப் பிரணவ மந்திராட்சரத்தை அரியென்று அட்சரத்தோடு சேர்த்து மூன்றுஅட்சரமாக்கி இடை விடாமல் ஜெபஞ்செய்யத்தொடங்கினன் இப்போது வேதாத்தியயன ஞ்செய்கின்றவர்கள் பிரதமத்தில் அந்த மூன்றட்சரத்தையும் உச்சரி த்து அப்பால் சாங்கமாக வேதாத்தியயனஞ்செய்கின்றார்கள் அப்படி பிரதமத்திலுச்சரித்து பிறகு வேதாத்தியயனஞ்செய்தால் அதில் என் ன அபசாரம் நேரிட்டபோதிலுந் தோஷமில்லை மேலும் இப்போது ஒருவன் கிழக்குமுகமாய் நின்று ஹரி ஹரி என்றுசொன்னல் அவன் செய்த சகலதோஷங்களும் நிர்த்தோஷமாகும் அவனை எந்த பாதகங் களும் அணுகாது.

கேட்டீரோ நாரதரே, அப்பால் பிரமதேவனும் தாமரை புட்பத் தின்மேலிருந்து தாரகமாகிய மூன்றட்சரத்தையும் செபித்துக்கொ ண்டு ஆயிரவருஷகாலந் தவசுபண்ணி அந்தபேர் மகிமையினுல் காய த்திரிமந்திரங்களை யுண்டாக்கினன் அதன் மகிமையினுல் முதல்யாகத் தில் அவன்முகத்திலிருந்து பூலோகமும் அக்கினிக்ஷேத்திர கர்மமும் யசுர்வேதமும் யாகத்துக்குவேண்டிய ஒன்பது மந்திரங்களும் தேவ தைகளில் அக்கினிதேவனும் காயத்திரிசெபங்களும் மனிதர்களில் பிராமணர்களும் நாலுகால்மிருகங்களில் வெள்ளாடுகளுமுண்டாயின அப்பால் இரண்டாவதுயாகத்தில் அவன் கையிலிருந்து தேவலோக மும் சாமவேதமும் அசுரர்களும் எக்கியத்துக்குச்சாதகமான பஞ் சாட்சரங்கள்கூடிய மந்திரங்களும் தேவதைகளில் இந்திரனும் மனி தர்களில் க்ஷத்திரியர்களும் நாற்கால்மிருகங்களிற் குறும்பாடுகளுமு ண்டாயின அப்பால் மூன்றாவது யாகத்தில் அவன் தொடைகளிலிருந்து ருக்குவேதமும் சோமயாகமும் தேவதைகளில் அசுவனிதேவதை யும் எக்கியங்கள்செய்யவேண்டிய பதினெண்பிரீதிகளும் சப்தமந்திரி களும் மனிதர்களில் வைசியர்களும் நாலுகால்மிருகங்களில் பசுக்க ளுமுண்டாயின அப்பால் நாலாவது யாகத்தில் அவன் பாதங்களிலி ருந்து அதர்வணவேதமும் எக்கியத்திற்குவேண்டிய இருபத்தொரு மந்திரங்களும் முப்பத்திரண் டட்சரங்களும் மனிதர்களில் சூத்திரர் களும் நாலுகால் மிருகங்களிற் குதிரைகளுமுண்டாயின.

இப்படி சகலபுவன சராசரங்களையுந் தபோபலத்தினுல் திருஷ்டி பண்ணின அந்த பிர்மாவினுடைய காதுகுறும்பிகளிலிருந்து ராஜசகு ணசம்பந்த மானமதுவென்னும் ராக்ஷதனும் தாமதகுணசம்பந்த மான கயிடவனென்னும் ராக்ஷதன்பிறந்து சகலலோகங்களிலும்புகு

ந்து நிர்த்தூளியாக்கிவிட்டு மறுபடியும் பிரமாவினிடத்திற்குவந்து நாலுவேதங்களையும் திருடிக்கொண்டுபோய் சமுத்திரத்தில்மூழ்கிப் போனார்கள். கேட்டீரோ நாரதரே, அப்பால் அந்த பிரமதேவன் வேதங்களைப் பறிகொடுத்தபடியினால் ஒன்றுந்தெரியாத மூடனைப் போல் நாலுதிக்குந் திகைத்துப்பார்த்து ஒன்றுந்தோன்றாமல் பிரமைகொண்டவனாய் திரும்பவும் தான் வாசமாயிருக்கப்பட்ட தாமரைப்புட்பத்தின் கொடிவழியே இறங்கி அந்தக் கொடியின் வேரைக்கண்டு பிடிக்கமாட்டாமல் மயங்கி அந்தக்கொடியிலுள்ள கூர்மையான முட்களினால் கிழிபட்டுத்திரும்பி மறுபடியுந்தன்னுடைய யதாஸ்தானமாகிய தாமரைபுட்பத்தின்மேல் வந்து உட்கார்ந்துகொண்டு இனியென்னசெய்கிறதென்று வாய்விட்டழுது புலம்பி நான் இந்தச் சமுத்திரத்திலாகிலும் விழுந்து செத்துப்போகிறேனென்று கூச்சலிட்டான்.

அப்போது திருப்பாற்கடலில் வடபத்திரசயனத்தில் துயில்செய்துகொண்டிருக்கிற விஷ்ணுவுக்குத்தெரிந்து ஓ ஓ இதேது மோசம் வந்ததென்று திடுக்கிட்டெழுந்திருந்து ஒரு மச்சரூபமாய் ஓடிவந்து ஓய் பிரமாவே, நாம் வருகிறோம் நீபயப்படாதே பயப்படாதேயென்று அபயஸ்தங்கொடுத்து சமீபத்தில்வந்து அவன் சரீரத்தைத் தடவி கண்ணீரைத்துடைத்து அவனுக்குப் பலவிதமான தேறுதல் சொல்லி அப்பா நானுனக்குத் தகப்பன் நீ எனக்குப்பிள்ளையாகையால் நீ பறிகொடுத்துவிட்ட வேதங்களை நானேபோய் தேடிக்கண்டு பிடித்துக்கொண்டு வருகிறேன் இவ்விடத்திற்றானே நீ பயப்படாமலிருவென்று அவனை அங்கே நிறுத்திவிட்டு மச்சரூபமாய்வந்த விஷ்ணுவானவர் குதிரைமுகமும் மனிதசரீரமுமான ஒரு திவ்வியரூபமெடுத்து மதுகைடபர்கள் என்னும் ராக்ஷதர்களிருக்குமிடத்திற்குப் போய் அவர்களைக்கண்டு அவர்களோடு சற்றுநேரம் சண்டைசெய்து போராடி அவர்களைக்கொன்றுவிட்டார்.

பிறகு அந்த நாலுவேதங்களையும் எடுத்துக்கொண்டு யதாரூபமாய் மகாசங்கோதாஷ சல்லாபவினோதமாகவே தவவடிவமாயிருக்கிற கருடாழ்வான்மேலில் எழுந்தருளி சதுர்ப்புஜங்களிலும் சங்குசக்கரம் கோதண்டம் தண்டம் வாள் என்னப்பட்ட பஞ்சாயுதங்களையுந் தாங்கிக்கொண்டு கவுஸ்துபாபரணமும், வனமாலிகையும், பீதாம்பரமும், பிரகாசிக்கக் கோடிசந்திரர்கள் சூரியர்கள் உதயமானதுபோலே லட்சுமி சமேதராய், வேதங்களைப் பறிகொடுத்து விட்டோமேயென்று பிலாபித்துக்கொண்டிருக்கிற பிரம்மாவுக்கெதிரேவந்து அந்தவேதங்களைக்கொடுத்து அப்பா மகனே நான் உபதேசம்பண்ணாமல் வேதங்களை உன் கையிற்கொடுத்தபடியினால் நீ பறிகொடுத்துவிட்டாய் மறுபடியும் நான்போய் அந்த ராட்சதர்களைக்கொன்று வேதங்களைக் கொண்டு வந்தபடியினால் உனக்குக் கிடைத்தது இல்லாவிட்டால் உனக்குக் கிடைக்கமாட்டாது ஆகையினால் இனியாகிலும் நான்

முன்னமேஉபதேசித்திருக்கின்ற பிரணவமந்திரத்தைப் பயபக்திவிசுவாசத்தோடு தியானித்துக்கொண்டு பத்திரமாயிருவெனவுறைந்தார்.

இந்த வேதங்கள் குருவுபதேசமில்லாதவர்களுக்குப் பலிக்கமாட்டாது குருபத்தியாயிருந்து குருகடாட்சம் பெற்றிருப்பார்களாகில் அவர்களுக்குப்பலிக்கும் குருபத்திசெய்கிறவன் நீச்சனாயிருந்தாலும் அவன் பிராமண வம்மிசத்திற்பிறந்து வேதாத்தியயனஞ்செய்து பரமபாகவதனுவான் அத்தியாபானஞ்செய்த வேதபாடங்களை மறந்தவன் நாசத்தையடைவான் பிராமணகுலத்திலே பிறந்தும் வேதாத்தியயனஞ்செய்யாமலிருந்தால் அவன் பிரமஹத்திதோஷத்தையும் சுராபானஞ்செய்த பாதகத்தையும் அடைவான் வேதங்களை சிலநாள் அப்பியாசித்து பிறகு விட்டுவிட்டால் அவன் கெற்பத்திலிருக்கிற சிசுவைக் கொன்ற தோஷத்திற் போவான்.

வேதங்களைப்படித்தும் அனேக யாகாதிகிருத்தியங்கள் செய்தும் என்னிடத்திலும் குருவினிடத்திலும் பக்தி விசுவாசமில்லாமலிருப்பானுகில் அவன் காண்டாமிருகமாய்பபிறந்து பிரஷ்டனுகிப்போவான் அவன் ஒருக்காலும் கரையேறுகிறதில்லை அவன் வெகு பிறவிகளிற் பிறக்கவேண்டும் அப்படிப்பிறந்தாலும் மகாயிழிவான பிறவிகளிற்பிறந்து பாவகிருத்தியங்களையேசெய்து சகலமான பேர்களாலும் நிந்தனைசெய்யப்பட்ட பாபிஷ்டனுய்ப்பிறந்து கல்லாய் புழுவாய்ப்பிறந்து நெடுங்காலங் குயவன் திகிரியைப்போல பல பிறவிகளிலுஞ் சுழன்று கிஞ்சித்தாகிலும் ஓய்வில்லாமல் திரியவேண்டும் என்னிடத்திற் பக்தியில்லாமல் சகல வேதாந்த சாஸ்திரபுரான இதிகாசங்களை இடைவிடாமற்படித்து அவற்றி னர்த்தங்களைக் கரடறவாராய்ந்தறிந்தவனையும் அவைகளின் பயனென்றுமறியாமல் என்னிடத்தில்மாத்திரம் பக்திவிசுவாசமாயிருக்கிற புருஷனையும் சீர்தூக்கிப் பார்க்குமளவில் என்னுடைய பக்தனே அதிக மேன்மையுடையவனுவான்.

என்னிடத்தில் பக்தியில்லாமல் சகல சாஸ்திரபுராணனுயிருந்தாலும் அவன் சண்டாளனுய்க் கிருதகனுப்பிறப்பான் என்னிடத்திற்பக்தியுள்ளவன் கீழ்மையான பஞ்சமகுலத்திற் பிறந்தவனுயிருந்தபோதிலும் அவனே பிராமணன் அவனே பரமபுருஷன் அவனே பாக்கியவான் அவனே புண்ணியவான் அவனே யோக்கியவான் பரமமுக்தன் அவனே பரமஞானி அப்படியில்லாமல் பிராமணகுலத்திற்பிறந்து நான்குவேதங்களுமுணர்ந்து தானதருமம் யாகாதிகிருத்தியங்கள்முதலான சற்கருமங்களைக் குறைவில்லாமல் நடத்துகின்றவனுனுலும் என்னிடத்தில் பக்தியில்லாதவனுனுல் அவனே நீசனுவான்.

ஓய் பிர்மாவே, நீ என்னிடத்தில் சதுர்வேதம் உபநிடதங்கள் அர்த்தசாஸ்திரங்கள் சிற்பசாஸ்திரங்கள் சோதிடசாஸ்திரங்கள் இது முதலான சகல சாஸ்திரங்களுந் தெரிந்துக்கொண்டாய் ஆகையால் இனி கின்னரர், கிம்புருடர், கந்தர்வசாத்திய வித்தியாதரர்களான சகல தேவதைகளையும் மனிதர்களையும் சீவராசிகளையும் சொற்குதாத

ங்களையும் அவரவர்களுக்குத் தகுந்தலோகங்களையும் போகங்களையும் உண்டாக்கி அவரவர்கள் தாரதம்மியத்திற்குத் தகுந்த வர்ணாச்சிரம தர்மங்களையும் நடப்பித்தருளென்று பிரமதேவனுக்குக் கட்டளையிட்டருளி ஸ்ரீமந்நாராயணமூர்த்தி கருடவாகனரூடராய் வைகுந்தத்திற்கெழுந்தருளினாரென்று பரமசிவன் திருவாய்மலர்ந்தருள அதுகேட்டு நாரதபகவானும் பாக்கியம் பாக்கியமென்று பரமசிவனுக்கு நமஸ்காரஞ்செய்து ஆனந்தபரவசப் பட்டிருந்தார்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



உ

ஸ்ரீரங்கநாதாயநமஃ.

## மூன்றும் அத்தியாயம்.



துதிகவி-விருத்தம்.

புவியதனைப்பாயதாய்ச் சுருட்டிப்போய்ப் பாதாளத்திற் புகுந்த பொற்கண், அவுணனுயிர்குடித்திமைப்பி னப்புவியைமுன்போலுண்டாக்குமாறு, நவமுறமொண்பிறைக்கோட்டுப்பன்றி யுருக்கொண்டருளிய நரகர்போற்றப், பவமகத்துமரங்கத்திற் பாம்பணைமேற்றுயில்கூறும் பரமம்போற்றி.

அப்பால், நாரதபகவானெழுந்துநின்று ஸ்ரீ கைலாசபதியாகிய பரமசிவனுக்குப் பிரதட்சணநமஸ்காரஞ்செய்து சுவாமி பிறகு அந்த பிர்மதேவன் சிருஷ்டிபண்ணின கிரமங்களையும் அவனுக்கு ஸ்ரீமகாவிஷ்ணு செய்த அனுகூலங்களையும் விவரமாய் திருவுளம்பற்றியருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டு பரமசிவமூர்த்தியுஞ் சந்தோஷமடைந்து நாரதரைப்பார்த்து நீரே இவ்வளவு அபேட்சையாய்க் கேட்கிறபடியால் நாம் சொல்லுகிறோம் நீர் சாவகாசமாய்க்கேளும் எப்படியென்றால் அந்த பிர்மதேவன்போய் பெருமாள்கட்டளையிட்டபடியே அநேககாலம் தவசு செய்துக்கொண்டிருந்தார் பிறகு சகல புவனங்களையுஞ் சிருஷ்டிசெய்து சோதிடநூலைப்பார்த்தவிடத்தில் தேவேந்திரனுடைய ஆயுசும் அதிகாரமும் போகபாக்கியங்களும் சிறிதுநாளில் நசித்துப்போகுமென்று தெரிந்து இன்னம் மற்றுமுள்ள யட்சகின்னரர் கிம்புருடர் சித்தவித்யாதர கணங்களுடைய ஆயுசும் ஐஸ்வரியமும் மனுஷர்களுடைய அற்பாயுசும் போகபாக்கியமும் தம்முடைய காலவளவும் இம்மட்டென் றறிந்துக்கொண்டு நாம் இதுகளையெல்லாம் பகவானால் கிரமமாகத் தெரிந்துக்கொள்ளவேண்டுமென்னும் உறுதிகொண்டு அதிதாகமாய் திருப்பாற்கடலுக்குச்சமீபத்திற்போய் நின்று வெகுகாலந்தவசுசெய்தான்.

கேட்டீரோ நாரதமுனியே, அப்படி நெடுங்காலந் தவசுபண்ணின பிர்மதேவனுடைய தவசுக்குத் திருவுளமிரங்கி மகாவிஷ்ணுவானவர் கூர்மாவதாரங்கொண்டெழுந்தருளிவந்து பிர்மதேவனுக்கு தரிசனங்கொடுத்தருளினார். அப்படி கூர்மரூபியாய்வந்த பகவானுக்கு பிர்மதேவன் அநேகவந்தனை வழிபாடுகள்செய்து சுவாமி தேவரீர் அடியேன் நிமித்தமாயெழுந்தருளிவந்து தரிசனங்கொடுத்தருளியது உண்மையாகுமானாலும்முடைய எதார்த்த சொரூபத்தை பிரத்தியட்சமாக காண்பித்தருளவேண்டும் அடியேனிதுவரையிலும் தேவரீருடைய நிசசொரூபத்தைக்கண்டு தெரிசனஞ்செய்ததில்லை இப்போதாகிலும் உமது நிசசொரூபத்தைக் காண்பித்தருளவேண்டுமென்று துவாதசநாமங்களையும் கொண்டாடித்துதித்தான். அதுகண்டு கூர்மரூபியாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும் பிரமதேவனைப்பார்த்து வாரும்பிள்ளாய் பிர்மாவே, உன்னைப்போலொத்த பிரமாக்கள் அனேகம்பேர் வந்தாலும் என்னுடைய நிசரூபத்தைக் கண்டுபிடிக்கமாட்டார்கள் நானினைத்தமாத்திரத்தில் அனந்தமாயிரம் பிர்மாக்களையும் பிறப்பிக்கவும் இறப்பிக்கவுங்கூடும்.

ஆனபோதிலும் என்னுடைய பக்தசனங்களாயிருக்கிறபேர்கள் எனது நிசசொரூபத்தைக் காணவேண்டுமென்று நினைத்து அக்கணமே அவர்களெனது நிசசொரூபத்தைக்கண்டு தரிசிப்பார்கள் மற்றபேர்கள் எப்படிப்பட்ட வல்லவர்களானாலும் என்னைக் கண்டுதரிசிக்க முடியாது. பக்தஜனங்களை ரட்சிக்கும் நிமித்தம் அனேக அவதாரங்களெடுப்பேன் அல்லாமலும் மச்சமானது பார்வையினால் கூர்மமானது தியானத்தினாலும் சமமாது ஆலிங்கனத்தினாலும் அதன் தன் சிசுக்களை அதனதனுருப்படுத்தி வர்த்திக்கச்செய்கிறதுபோல நாம் உன்னை யுருப்படுத்தி வர்த்திக்கச்செய்யும நிமித்தம் மேற்சொல்லிய மூன்று பங்குகளிலும் உனக்கு தரிசனங்கொடுத்து பிரணவமந்திராக்ஷரங்களையும் உபதேசஞ்செய்து நீசெய்த யாகங்களிற்றினே ருக்கு யஜுர் சாம அதர்வணமென்னுஞ் சதுர்வேதங்களையும் உண்டாக்கிக் கொடுத்து உனக்கு பிரமஞானம் ஐயந்திரிபில்லாமல் பிரகாசிக்கும்படி அசுவமுகமும் மனுஷசரீரமுமாய் வந்து பிரத்தியட்சமாகினேன். இப்படிப்பட்டமகிமையெல்லாங் காண்பித்தும் உனக்கு என்னுடைய நிசசொரூபம் கரதலாமலகமாய் பிரகாசிக்காதபடியினால் முன்னமே நான் உனக்கு உபதேசித்துவைத்த பிரணவமந்திரத்தை அஷ்டாட்சரத்துடன் கூட்டிச் செபஞ்செய்துக்கொண்டிரு அப்படிச் செய்வாயாகில்உனக்குசகலவல்லபங்களுமுண்டாகும் சகலவேதாந்தரகசியங்களும்சகலமந்திரார்த்தரகசியங்களும்வெளிப்படும் இந்தமந்திரமே மூலமந்திரமென்றுசொல்லப்படும் இந்த மந்திரத்தைச்சதாகாலமும் பிரீதியுடன்செபித்துக்கொண்டிருபரமபாகவதர்கள்எப்போதுமென்னைவிட்டுப்பிரியாமல் சகல சம்பிரமத்துடனே வைகுந்தத்தில்நித்தியதிருப்தியுடையவர்களாய் வாழ்ந்திருந்தார்கள பூலோகத்திலிருக்கின்றபோதும் அவர்கள் சகல போகபாக்கியங்களிலும் புத்திரமித்திர சம்பத்துகளி

லும்குறைவில்லாதவர்களாகயிருப்பார்கள். ஆகையினால் நீயும் அஷ்டாட்சரத்தையிடையுறாமல் உச்சரித்துக்கொண்டிருவென்று கட்டளையிட்டுபகவான் ஸ்ரீவைகுந்தத்திற்குப் போய்விட்டார்.

கேட்டீரோ நாரதரே, அப்பால் பிரமதேவனும் பகவானுடைய வாக்கியத்தைச்சிரசாகவகித்து அஷ்டாட்சரஜெபம் பண்ணிக்கொண்டு மறுபடியும் ஆயிரம்வருடந்தபசுபண்ணினான் அப்படித்தவஞ்செய்த பிரமதேவனுடையதபசுக்குத் திருவுளமிறங்கி, ஆதிசேஷசயனராகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்திகடாட்சித்தபடியால் திருப்பாற்கடல் மத்தியிலிருந்துதிவ்வியவிமானம் சகத்தசகாயமாய்சகஸ்திரகோடி சூரியப்பிரகாசம் போற்பிரகாசித்துக்கொண்டு அந்தரமார்க்கமா யெழுந்தருளிவந்தது அதுதெரிந்துபிரமதேவனும்தபசுநிலைவிட்டெழுந்துநின்றுவிமானம்வருகிற வைபவத்தைக்கண்டு அதிசயமடைந்து மகா பயபக்தியுடனே நேத்திரஞ்செய்து அந்தவிமானத்தை உற்றுப்பார்க்குமளவில் அதில் ஸ்ரீவைகுண்டவாசிகளாயிருக்கிற அனந்தரும் ஜனகாதியோகீஸ்வரர்களும் இன்னமும் சத்தியலோகவாசிகளாயிருக்கிற சகல தேவகூட்டங்களும் யட்சகின்னரகிம்புருடகருடகாந்தர்வசித்தவித்யாதரகூட்டங்களும் சகலரிஷிக்கூட்டங்களும் பிரகாசித்திருந்தார்கள் ஓய்நாரதமுனிவரே, அதில்நீருமிருந்தீர்.

அப்படிப்பட்டஸ்ரீரங்கவிமானத்தை வேதசொரூபியாகியகருடாழ்வார்முதுகில்தாக்கிக்கொண்டு ஆதிசேஷன் முத்துச்சரங்களால் அலங்கரித்த வெண்பட்டுக்குடை கவிததுக்கொண்டுவர விஷ்வக்சேனர் பொற்பிரம்பினால் சந்தடிவிலக்கிக் கட்டியங்கூறிவர சந்திரசூரியர்களிருவரும்வெண்சாமரைவீசிவர ஓய்நாரதரே,நீரும் தும்புருவும்கந்தருவர்களும் அரிகீர்த்தனைகள்பாடிவர இன்னமற்றுமுண்டான தேவரிஷிகளனைவரும் அஞ்சலியஸ்தர்களாய்நின்று சகஸ்திரநாமங்களையும்புகழ்ந்துவர தேவேந்திரனும் தேவர்களும்புஷ்பமாரிபொழிந்துவரஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகியும் ஆதிமத்தியாந்தரகிதராகியும்ஆபத்பாந்தவராகியும் விளங்கப்பட்ட ரங்கநாதர்வந்தாரென்று திருச்சின்னங்களூதிவர பதினெட்டுவகைமேளவாத்தியங்களும் தேவதுந்துமியும் அண்டகடாகங்களெல்லாஞ் செவிடுபடும்படி தாம் தாமென்றுமுழங்கிவர அவ்வகைபட்டசப்பிரமங்களுடனே ஜெயம் ஜெயமென்றுபூமியிற்கொண்டுவந்திறக்கினார்கள்.

அதுகண்டு பிரமதேவனும்அடியற்றமரம்போல் பூமியில்விழுந்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து அவருடையநாலுமுகங்களாலும்நாலு வேதங்களையும் பாராயணஞ்செய்துக்கொண்டு ஆனந்தபரவசனாய்நின்றான் அப்பொழுது அந்தவிமானத்துடனே வந்த கட்டியக்காரர்களாகிய பொற்பிரம்புக்காரர்களில் சிரேஷ்டரானவனந்தரானவர் பிரமதேவனைப்பார்த்து வாரும்பிரமதேவரே,நீர்செய்ததபோமகிமையினால் அகிலாண்

டகோடி பிரமாண்டநாயராகிய ஸ்ரீமந்நாராயணருடைய கிருபகடா க்ஷத்தினால் வேதசாரமாகிய மூன்றெழுத்து மோருருவமாகப் பிரகா சிக்கின்ற பிரணவமந்திரமே இந்த விதமாகவும் அந்தமந்திரார்த்தமா ய்விளங்குகின்ற பராபரவஸ்துவே ஸ்ரீரங்கநாயகராகவும் தோற்றப்ப ட்டன உம்முடைய தயவினால் பூலோகத்திலுள்ள அரிபத்தர்களனைவ ரையும் இந்தவிமானத்தைச் சேவித்துக்கரையேறுவார்கள் அதற்குச் சந்தேகமில்லை இதோஅந்தவிமானத்துமத்தியில் பிரணவசொரூபியா யிருக்கின்ற ஹரிசர்ப்பசயனத்தில் மகாவைபவத்துடன் பக்தஜனங்க ளை ரட்சிக்கும்பொருட்டு யோகநித்திரை சாதிக்கின்றார் ஆதலால் உ ம்மைப்போலபக்திபுடைய பேர்கள் இந்தவிமானத்தையே சேவிக்க வேண்டும் ஏனென்றால்.

பூர்வத்தில் உம்மைப்போலொத்த சதுர்முகப்பிரமாக்கள் அநே கங்கோடிபேர் அநேகமாயிரம் வருஷகாலந் தவசுபண்ணி இந்தவிமா னத்தையும் இந்தவிமானபதியாகிய ஸ்ரீரங்கநாயகரையும் சேவித்துப் பூசித்து அந்த பூசாபலத்தினால் அனேககாலம் பிரமபட்டம் அனுப வித்தார்கள், இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாய்வு, குபேரன் ஈசானியனென்றுசொல்லப்பட்ட அஷ்டதிக்கு பாலகர்களு ம் இப்படியேசேவித்து திசாநாதராகினார்கள் ஆதலால் நீரும் இந்த விமானத்தைச் சேவித்துப் பூசிப்பீராகில் உமக்குச்சர்வ அதிகாரமும் உண்டாகுமென்றுசொன்னார் அந்தவசனமிர்தங்களைக்கேட்டு பிர்ம்ம தேவனும் அப்படியாவென்று பயபக்திவிசுவாசத்துடன் அந்தவிமா னத்தினுட்புகுந்து தரிசிக்குமளவில் முன்னர் இந்தப் பிரமதேவனால் சிருஷ்டிபண்ணப்பட்ட சகலபுவனங்களும் சகலசராசரங்களும் காண ப்பட்டன அல்லாமலும்,

கவி.

எண்ணூறுகோடி யுகம்பார்த்திருக்கினும்
கண்ணபிரானைக் கண்டறிவாயில்லை
உண்ணாடிச்சற்றே யொளிபெறநோக்கிடில்
கண்ணபிராணனைக் கண்டுய்யலாகுமே.

என்றுமுன்னோர் கூறியிருக்கின்ற நியாயம்போல அந்தவிமான த்தின்மேலே ஆகாசம்கீழேபூமியும் மத்தியில் மகாலட்சுமி சமேதரா ய் ஆதிசேஷசயனத்தில் பகவான் பள்ளிகொண்டிருக்குந்தானமும் அ ந்த வாசற்படியினிருபுறத்திலும் ஜெயவிஜயாளென்கிற துவாரபால ர்களும் பெருமாள் கிரீடபாரிசத்தில் கணபதியும் பாதபாரிசத்தில் துர்க்கையும் சிரசுக்கும் பாதத்துக்கும் மத்தியில் சரஸ்வதியும் காய

த்திரியுமாகத் தோற்றப்பட்டன அல்லாமலும் அந்தவிமானத்து உச்சியில் நாலுவேதங்களை நாலுகலசமாகவும் பிரணவமுதலிய மகாமந்திரங்களை சிகரமாகவும் விளங்கின அதுவுமல்லாமல் பாதத்தில் எக்கியங்களும் நெற்றியில் எக்கியமந்திரங்களும் வயிற்றில் அசுவனிகளும் அந்தராளத்தில் மருத்துக்களும் அஷ்டவசுக்களும் ஏகாதசருத்திரர்களும் துவாதசருத்திரர்களும் நவக்கிரகங்களும் இருபத்தேழுநட்சத்திரங்களும் சப்தரிஷிகளும் அஷ்டதிக்குபாலகர்களும் சகலதேவர்களும் காணப்பட்டன இப்படிகாணப்பட்ட சகலவைபவங்களையும் பார்த்து ஆச்சரியப்பட்டு பிரமதேவனானவன் அந்தபகவானுக்குச்சர்வோபசாரபூசைகளும் நடப்பித்து பிரதக்ஷணநமஸ்காரஞ் செய்துமகாபயபக்தியுடனே அந்தப்பெருமாளுடைய திருவுருவத்தை திய ானித்துப்பார்க்குமளவில்.

இந்திரநீலம்போற் பிரகாசிக்கின்றமேகவர்ணமும் பூர்ணசந்திரபிம்பம்போற் பிரகாசிக்கின்ற திருமுகத்தாமரையும் மூன்றாம்பிறைபோல்விளங்கப்பட்ட நெற்றியும் பஞ்சாயுதங்கள் தாங்கப்பட்ட கைத்தாமரைகளும் வீரலட்சுமிவசிக்கின்ற தோள்களும் கிருபையே வடிவமாய் விளங்குகின்ற திருக்கண்தாமரைகளும் அவற்றினுள் மதுபானங்குடித்து மயங்கிகிடக்கின்ற வண்டுகள்போன்ற கருவிழிகளும் கோதண்டத்திற்குச் சமானமாய் வளைந்திருக்கின்ற புருவங்களும் கொவ்வைக்கனிபோலும் சிவந்தவாய்த்தாமரையும் எள்ளின் புட்பத்தையொத்த நாசிகளும் திரிலோகங்களும் பிரமைகொள்ளத்தக்க புன்சிரிப்பும் வலம்புரிச்சங்குபோன்றகழுத்தும் மகாலட்சுமிவாசமாயிருக்கின்ற மார்பும் சகலசராசரங்களையும் அடைக்கிவைத்திருக்கின்ற திருவயிறும் கங்காவர்த்தனஞ்சுழித்திருக்கின்ற சுழல்போன்ற நாபித்தாமரையும் வாழைத்தண்டை யொத்ததுடைகளும் மன்மதபாணம்போன்ற ஆசனமும் செங்கரும்புபோன்ற கணைக்கால் களும் சந்திரரேகை வச்சிரரேகை பதுமரேகை அங்குசரேகை சுவுசிகரேகைகளுடன் சிவந்திருக்கப்பட்ட பாததாமரைகளும் நவரத்தினகசிதமாய் கோடிசூரியரொளிபோற் பிரகாசிக்கின்ற கிரீடமும்மகாகுண்டலங்களும் வனமாலைமுதலிய சுகந்தபரிமளபுட்பமாலைகளும் கவுஸ்துவாபரணமுதலிய நானாவிசித்திராபரணங்களும் விநோத வீதமும் பீதாம்பரமும் பிரகாசிக்கும்படி மகாவைபவத்துடன் ஒருகையைச்சிரசின் கீழ் வைத்துக்கொண்டு மற்றொருகையைத்திருமேனியில் நீட்டிக்கொண்டு ஆயிரம்பணாமுடிகளுடைய ஆதிசேஷன்பேரில் யோகநித்திரை செய்துகொண்டிருந்தார்.

அப்படி விளங்குகின்ற ஸ்ரீரங்கநாதருடைய திருவழகைத் தோத்திரஞ்செய்து சுவாமிதாசனை ரட்சித்தருளவேண்டும் ரட்சித்தருளவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்து ஸ்ரீரங்கநாதாயநமஹா ரங்கநாதாயநமஹாவென்று பலவாறாகத்தவுத்தியஞ்செய்தான் கேட்டீரோ நாரதரே யென்று பரமசிவன்திருவுளம் பற்றியருளினார் அதுகேட்டு நாரதமுனிவரும் ஆச்சரியப்பட்டு மகாசந்தோஷத்தை யடைந்திருந்தார்.

மூன்றாவது-அத்தியாயம்-முற்றிற்று.





ஸ்ரீரங்கநாதாயநமஹா.

## நான்காம் அத்தியாயம்.



துதிகவி-விருத்தம்.

சுரர்முதலோரேத்தெடுப்பக் கற்றூணினரசிங்கச்சொரூபமாகி [ம்
இரணியன்வல்லுயிர்குடித்து அரிநமோநமோவென்றுள்ளிரங்கிநிற்கு
ஒருமதலைபிரகலாதனனை யளித்தருள்வர்யுலகமுய்யத் [ற்றி
திருவரங்கத்தரவணைமேற் றிருக்கண்வளர்ந்தெமையாளுந்தேவேபோ

அப்பால் நாரதமுனியானவர் ஸ்ரீகயிலாசபதியாகிய சாம்பமூர்த்திக்கு தெண்டனிட்டு சுவாமி அதற்குமேல் பிரமதேவர் நடந்தவர்த்தமானமும் அடியேனுக்குச்சொல்லி அருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன்திருவுளம்பற்றி அருளுகின்றார், கேட்டீரோநாரதரே நீர் இவ்வளவாசையாய்க் கேட்கிறபடியால் அந்த ரகசியத்தையுஞ் சொல்லுகிறோம் அதெப்படியென்றால் பிரமதேவர் அந்தரங்கவிமானத்திற் பள்ளிக்கொண்டிருக்கிற ஸ்ரீரங்கநாதரைப்பார்த்து ஸ்ரீதரா, ஸ்ரீநிவாசா, தாமோதரா, அனந்தசயனா, லட்சுமிவாசா, ரங்கநாயகா, சுவாமி ஆயிரஞ்சிரசுகளும் ஆயிரங்கண்களும், ஆயிரங்கைகளும், ஆயிரந்திருநாமமுடையவராய் ஆயிரங்கோடி பிரமாண்டங்களிலும் வாசமாயிருக்கிற உம்முடைய பாதங்களையே நான் சதாகாலமும் பூசைசெய்யவேண்டும் தேவரீரைக்குறித்தே ஆயிரம்யாகங்கள் பண்ணவேண்டும் பக்தஜநங்களைரட்சிக்கின்ற திருப்பாதங்களுக்கு நமோநமோவென்று ஆயிரந்தரம் சாஷ்டாங்கமாய் விழுந்து சேவிக்கத்தொடங்கினான்.

கேட்டீரோ நாரதரே ஒருதரஞ்சேவித்தால் வந்தனம் இரண்டுதரஞ்சேவித்தால் பிரணமம் மூன்றுதரஞ் சேவித்தால்தண்டம் நாலு

தரஞ்சேவித்தால் நமஸ்காரம் ஐந்துதரம்சேவித்தால் ஆதிகயம் பத்துதரஞ்சேவித்தால் சாஷ்டாங்கம் அப்படியிருக்கப் பிரமதேவன் ஸ்ரீரங்கநாதரைப்பார்த்துச் சுவாமி தேவரீருடைய திருப்பாத கமலங்களுக்கு இதோ ஆறுதரஞ்சேவித்தேன் இதோ ஆயிரந்தரஞ்சேவித்தேன் இதோ பதினாயிரந்தரஞ்சேவித்தேன் இதோகோடிதரஞ்சேவித்தேன் இதோபத்துகோடிதரஞ்சேவித்தேன் நான் இப்படியே உம்முடைய திவ்வியரூபத்தை சதாகாலமும் சேவிக்கவேண்டும் ஓய்லோகநாதா தேவரீரெனக்குப் பிதாவாகையால் என்னிடத்திற் கிருபை செய்ய வேண்டும் ஓய் ஆதிதேவா தேவரீர் எனக்குப்பிரசன்னமாய் எழுந்தருளிவந்து காட்சிகொடுத்தருளவேண்டும் ஸ்ரீமந்நாராயணமுகுந்தா, பத்மநாபாஹரி வாசுதேவா, வைகுண்டவாசா, ஜெகந்நாதா, கோவிந்தா, ஸ்ரீரங்கநாதா ஸ்ரீரங்கேசா ஜெயம்ஜெயமென்று ஸ்தவுத்தியம்பண்ணி பின்னும் அந்தப்பகவானைப்பார்த்து சுவாமி தேவப்பிராமணர்கள் உமது திருமுகத்திற்பிறந்தவர்கள் க்ஷத்திரியர்கள் உம்முடையகைத்தாமரையிற் பிறந்தவர்கள் வைசியர்கள் உம்முடையதுடையிற் பிறந்தவாகள் சூத்திரர்கள் உம்முடைய பாதத்திற் பிறந்தவர்கள் ஆகையால் அவரவர் வாணாச்சிரமதாமங்களும் நீரே அதுவுமல்லாமல் இந்திரனும் அக்கினியும உம்முடைய திருமுகம் சந்திரனும் சூரியனும் உம்முடைய கண்கள் இந்தப்பிரசண்டவாய்வு உம்முடைய பூர்ணவாய்யு இநதப்பூமி உம்முடைய திருவடி அந்தரலோகம் உம்முடைய நாபி சொர்க்கலோகம் உம்முடைய சிரசு எட்டுத்திக்குபாலகர்களும் உமது ஏவலாளர் பூமிதேவியும் ஸ்ரீதேவியும் உமதுஸ்திரீகள் மன்மதன் உமக்குத்திருமகன் இரவும் பகலும் உமது திருமேனியொளிவாகும்.

இப்படி சர்வபூதங்களிலேயும் சர்வாந்திரியாமியாய் வியாபித்து சகல சிவராசிகளையும் பிறக்கும நாலுவேதங்களும் உமக்கு அங்கமாயிருக்கும் அதெப்படியென்றால் சாங்கியயோகம்பரதசாஸதிரம் யாகசாஸ்திரம் வயித்திய சாஸ்திரம் சிற்பசாஸ்திரம் சோதிடசாஸ்திரங்கள் முதலானவைகளெல்லாம் உம்முடைய வசனங்களாம் வேதமூர்த்தியாயிருக்கிற தேவரீரோ புருஷோத்தமர் உம்முடைய ராசகுணத்தில் ஆதிசேஷனும் தாமசகுணத்தில் ஏகாதசருத்திரர்களும் பிறந்தார்கள். ஓஜெகந்க்காரணா ஸ்ரீமந்நாராயணா உம்மைப்பார்க்கிலும் அதிகமான தெய்வமில்லை உமக்குச்சமானமான தெய்வமுமில்லை அக்கினியும் வாய்வும உம்முடைய ஆக்கினைப்பிரகாரமே நடக்கின்றார் சந்திரனும் சூரியனும் உம்முடைய கட்டளைபின்படியே நடக்கின்றார்கள் மிருத்தியும் தேவதையும் உமது கட்டளையின்படியே நடந்துவருகின்

ருள ஆகையால் உமக்கு இன்னமும் அனேக நமஸ்காரம் பண்ணுகி றேன் ஸ்ரீரங்கதாமா மோட்சத்திற் கதிகாரியும் நீரே மாயாபிரபஞ்ச சம்சாரமானதும் நீரே ஸ்தூலசூட்சுமகாரணமும் நீரே இந்தபிரபஞ் சமெல்லாம் உமதுலீலாவினோதமாகப் பிரகாசிக்கின்றது ஆதிபுருஷ னும் அட்சயபுருஷனும் நீரே வளரப்பட்டதும் குறையப்பட்டதும்நீ ரே அச்சுதனாயிருக்கிற உமக்கு அநேக நமஸ்காரம்.

கர்மபந்தங்களினாற் சென்மபந்தம்பட்டுச் சேதனமாய்ச்சஞ்சரி க்கிற சகலவுயிர்களும் நீரே அசேதனமாய்ச்சஞ்சரியாமலிருக்கிற தா வரசங்கமங்களும் நீரே அவைகளுக்குத்தகுந்த போகபாக்கியங்களை யூட்டுவிக்கிறவரும் நீரே ஸ்ரீநிவாசா அச்சுதானந்தகோவிந்தா கேச வா நாராயணா மாதவா கோவிந்தா விஷ்ணு மதுசூதனா திரிவிக்கிரமா வாமனா ஸ்ரீதரா இருடிகேசா பத்மநாபா தாமோதரா ஸ்ரீரங்கதாமா பரவாசுதேவா வேணுநாதப்பிரியா உமக்குநமஸ்காரம் காளிங்கமர்த் தனகௌஸ்துவபரணமாயவா மச்சாவதாரா கூர்மரூபா வராகசொரூ பாநரசிம்மமூர்த்திபரசுராமாபலராமாஹயக்கிரீவாஉமக்குநமஸ்காரம் புராணபுருஷா புஜங்கசயனாபக்தவச்சலா பரந்தாமா நமோநமோவெ ன்றுஆனந்தத்தில் ஸ்தவுத்தியம்பண்ணிக்கொண்டுநிற்கிற பிரமதேவ னை அந்தபகவான் கிருபாகடாட்சத்தினாலெடுத்துப்பார்த்து வாரும்பி ள்ளாய்பிரமாவேநாம் நீசெய்த தபசுகளாலும் நீசெய்த ஸ்தவுத்தியங் களினாலும் சந்தோஷ மடைந்தோம் நீ முன்னமே நாம் கட்டளை யிட்டபடி சகல லோகங்களையும் கிரமமாகச் சிருஷ்டிபண்ணினதற்கு மெச்சினோம்.

ஆகையால் இந்த பூமண்டலத்தில் எவனாகிலும் இப்போதுநம் மை ஸ்தவுத்தியம்பண்ணிய திருநாமங்களை பரிசுத்தனாயிருந்து இ டைவிடாமல் பாராயணஞ்செய்வானாகில் நாமவனுக்குபிரசன்னமாகி அவன்கேட்டவரங்களெல்லாம் கொடுப்போம் நீசெய்தபசுக்கும் ஸ் தவுத்தியங்களுக்கும் பிரியப்பட்டு நம்முடைய நிசசொரூபத்தை உன க்கு தரிசனங்கொடுத்தருளினோம் அல்லாமலும் இனிமேல் உனக்கு வேண்டிய வரத்தையுங்கேட்பாயாகில் அதுவுந்தருகிறோ மென்று ப ரிபூணகடாட்சத்தினால் அமிர்தவருஷம் வருஷித்தது போல் திருவா ய்மலர்ந்தருளினார் கேட்டீரோ நாரதமுனிவரே யென்று பரமசிவன் திருவுளம்பற்றியருளினார்.

அதுகேட்டுநாரதரும் பரமசிவனைப்பார்த்து சுவாமிகாளகண்ட மூர்த்தி அந்தபிர்மதேவன் ஸ்ரீரங்கநாமரை ஸ்தவுத்தியம்பண்ணின திருநாமங்களைக்கேட்டு அடியேன் கிருதார்த்தனாகினேன் இனிமேல் எந்த காலத்தில் நானும் உபயகாவேரி சூழ்ந்திருக்கப்பட்ட திருவர

ங்கமென்னூந் திவ்வியஸ்தலத்திற்குப் போய் காவேரிதீர்த்தத்திலும் சந்திரபுட்கரணிதீர்த்தத்திலும் மகாபக்தி வினயத்துடனே ஸ்நானஞ் செய்து ஜெபதபானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அப்பால் அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராகியும் ஆதிமத்தியாந்தரகுதராயும் ஆபத்பாந்தவா அநாதரட்சகராயும் அகிலபுவனசம்ரட்சகராயும் கரிராஜவரதராயும் விளங்கப்பட்ட ஸ்ரீரங்கநாதரைச் சேவித்து பூசித்து சேசிக்கப்போகிறேனென்று பலவாறுகத்தோத்திரம் பண்ணினூர்.

நான்காவது அத்தியாயம்-முற்றிற்று.





# ஐந்தாம் அத்தியாயம்.



துதிகவி-விருத்தம்.

அகமமதைகொண்டொருமூன் றுலகினையுமொருகுடையிலரசுசெய்து
நிகழுமாவலிபாலோ வாமனமாய்ச்சென்றுசிரப்புற்றார்போல [ற்றச்
விகழுமொருமூவடிமண்கொண்டவனென் சகமடக்கியிமையோர்போ
சகமதனிற்பொன்னரங்கர்நன்னி லறிதுயில்வளருந்தாளுபோற்றி.

அப்பால் நாரதபகவானெழுந்திருந்து சாம்பவமூர்த்திக்கு நமஸ்காரஞ்செய்து ஒப்சுவாமிகாமதகஞ அந்தபிர்மதேவனுக்கு பெருமாள் சாதித்தருளியவரப் பிரசாதங்களையும் பிற்பாடு நடந்த சகல வர்த்தமானங்களையுந் தெரியச் சொல்லவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன் திருவுளமபற்றியருளுகின்றார்.

ஸ்ரீரங்கநாதரே பெருமாள் அப்படித் திருவுளஞ்செய்தருளியவசனங்களைக்கேட்டு பிரமதேவனும் சந்தோஷத்தையடைந்து சுவாமி கருணாகடாட்சா கஜேந்திரவரதா தேவரீர் அடியேனிமித்தம் இந்தத்திருவுருவத்துடன் பிரசன்னமாயெழுந்தருளிவந்து தரிசனங்கொடுத்தருளியது உண்மையாகில் எப்போது மிந்தத்திருவுருவத்துடன் இந்த திவ்வியவிமானத்தில் யெழுந்தருளியிருந்தே தெரிசனங்கொடுத்தருளவேண்டும் இந்த திவ்வியஸ்தலத்திலேயே இடைவிடாமலிருந்து திரிகாலமும் பூசைமுதலிய சர்வோபசாரங்களும் செய்யவேண்டும் இப்படிப்பட்ட மகத்துவமுள்ள திவ்யாலங்காரவிமான தரிசனஞ்செய்த பக்தஜனங்களுக்கு நாளுக்குநாள் அஷ்டயிஸ்வரிய

மும் ஆயுரோக்கியமும் தெய்வபக்தியும் குருபக்தியும் விர்த்திக்கச் செய்து சரீராந்தத்தில் மரணவேதனையின்றி அனுயாச மரணமாய் உம்முடைய திருவடி நிழலில்வந்து சேவைசெய்யும்படி கடாட்சித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அது கேட்டுபெருமாள் திருவுளமகிழ்ந்து ஓய்பிரமாவே நாமெப்போதும் இந்தவிதமானத்திலிருந்தே உனக்கும்மற்றுமுண்டான பக்தஜனங்களுக்குங் காட்சிகொடுத்தருளுகின்றோம்.

நமக்கு உன்னுடையகைகளினாலே தினமானம் அஞ்சுகாலமும் பூசைமுதலானசகலோபசாரங்களும் பண்ணவேண்டும் இப்படி நூறு வருஷகாலந்தப்பாமல் மகாபயபக்திவிசுவாசத்துடனே பூசைபண்ணுவாயாகில் ஸ்ரீவைகுந்தத்தில் நம்முடையபக்தசனங்களாய் விளங்கப்பட்ட நித்திய சூரியர்களுடன் சுகித்திருப்பாய் அதற்குச்சந்தேகமில்லை அந்த வைகுந்தத்தின் பெருமை எப்படிப்பட்டதென்றால் பிரமாண்டங்களுக்கு அப்புறம் திசாயானமிருக்கும் அதற்கப்புறம் விரஜாந்தியிருக்கும் அதற்கப்புறம் ஸ்ரீவைகுந்தமிருக்கும் அந்தவைகுந்தத்தில் நாம் பிரகிருததிவ்யமங்கள சக்ரத்துடன் பிருட்டிசமேதராயிருந்து தரிசனங்கொடுப்போம் நாம் அங்கேயிருக்கப்பட்ட திவ்யரூபத்துடன் இங்கேவந்து உனக்கு பிரத்தியட்சதரிசனங் கொடுத்தருளினோம் நாம் லீலாவிபூதியாய் சேதனங்களாயிருக்கபபட்ட மாயாபிரபஞ்சங்களையுண்டுபண்ணி அந்தபிரபஞ்சசம்பந்தமான சகல சீவராசிகளுக்குள் நாமேபிரவேசித்து சகலவினோதங்களையும் நடத்திவருகின்றோம் சகலபிரபஞ்சங்களையும் நாமே உண்டுபண்ணுவோம் நாமே ரட்சிப்போம் நாமே நாசமாக்குவோம் நம்மால் சகல பிரபஞ்சங்களையும் சகலசீவராசிகளையும் ஆக்கவும் அழிக்கவும் இதுகளாலுண்டாகும் பாபபுண்ணியங்கள் நம்மைச் சேரமாட்டாது நாம் கிருபையினாலே சகல சீவராசிகளுடைய இருதயகமலங்களில் எள்ளுக்குளெண்ணைபோல் வியாபித்து நின்று அவர்களுடைய உள்ளத்தில் ஞானவிளக்கைபிரகாசிக்கப்பண்ணி அஞ்ஞானவிருளைத் துரத்திவிடுவோம்.

இதுவும் அல்லாமல் நாம் சகல பிராணிகளிடத்திலும் பரிபூரணமாயிருந்து அவரவர்களை வினைக்குத்தகுதியாய் பாரபட்சமில்லாமல் கரணபுவன போகங்களைக்கொடுத்துத் தாயானவள் பிள்ளைகளைக் காப்பாற்றுகிறதுபோல காப்பாற்றிவருகின்றோம் இப்படிப்பட்ட நம்மைமாயாவிசித்திரத்தினால் தேவர்கள் முதலான சர்வஜீவராசிகளும் மேர்த்தைபடைந்து கண்டறியமாட்டார்கள் ஆகையால் நம்மைச

கல பிராணிகளுங்கண்டு தரிசிக்கும்படி மூன்றிடத்தில் நம்முடையதிசசொரூபத்தைக்காண்பித்தருளினோம் இந்தயிடங்கள் எங்கேயென்றால் திருப்பாற்கடலிலும் சூரியமண்டலமும் சொர்க்கமுமாம் அதனால்தான் நமக்குத் திருத்தாமனென்னு மொருதிருநாமமுண்டாயிற்று மேலும் ராசதகுணங்களினால் நம்மைக்கண்டறியமாட்டார்கள் இப்படிக்கண்டு கொள்ளாமல் மாயாசங்காரவாழ்க்கையினா லமிழ்ந்திக்கிடந்த சீவர்களையெடுத்துக்கரையேற்றும்பொருட்டு நாம் சற்பத்துக்குச்சற்பம் ஆயிரமவதாரங்களெடுப்போம் அப்படியெடுக்கின்ற காலத்திலும் பக்தியினாலாகிலும் சினேகிதத்தினாலாகிலும் பிராணபயத்தினாலாகிலும் புத்திரசோபத்தினாலாகிலும் தாசானுதாசர்களிடத்திலிருக்கிற பிரீதியினாலாகிலும் நம்மைநினைத்தபேர்களை யீடேற்றிரட்சிப்போம் நம்முடைய பக்தசனங்களாயிருக்கிறவர்கள் நமதுகல்யாணகுணகுணானுபவங்களைக்கண்டறிந்து காமகுரோத லோபமோகமதமாச்சரியவர்ச்சிதர்களாயிருந்து இடைவிடாமல் நம்முடைய திருநாமங்களை ஸ்தவுத்தியம் பண்ணிக்கொண்டாடுவார்கள்.

இன்னமும் நாம் பலவிதமானலீலாவதாரங்களெடுத்து சகலசீவராசிகளையும் நாட்டியஞ்செய்விப்போம் மேலும்நாம் சர்வபூதங்களிடத்திலும்வியாபகமாயிருந்து பக்தசனங்களைரட்சிப்போம் நாம்நானாரூபமானசரீரங்களிற்புகுந்து இச்சாசம்பந்தமாய்ஞானரூபமும்அஞ்ஞானரூபமுமெடுப்போம் மனுஷாவதாரங்களாகவு மிருகாவதாரங்களாகவும்பிறப்போம்அதுவுமல்லாமல்அர்ச்சாவதாரமென்கிறவிக்கிரகசொரூபமாகவும்விளங்குவோம் மரங்களிலும்பஞ்சலோகங்களிலும்கல்லுகளிலுமிருத்துக்களிலும்பிரகாசித்திருப்போம்பரமாத்துமாவாகியநாமேசேதனாசேதனங்களாய் பூமியில்சஞ்சரிக்கப்பட்ட சராசரவஸ்துக்களாய்விளங்குவோம் ஆகையால்இப்படிஅர்ச்சாவதாரமாய்பிரகாசிக்கப்பட்டவிக்கிரசொரூபங்களைஎவனாவதுகல்லென்றும் செம்பென்றும்மரமென்றும்பொன்னென்றும்மண்ணென்றும்சித்திர படமென்றும்நிந்தைசெய்துபரியாசம்பண்ணுவானாகில் அவனையும் அவன்வமிசத்தாரையும் நரகத்திலழுத்திப்போடுவோம் நம்மை பூசைபண்ணுகிறவனையும் நம்முடையதிருநாமங்களை துதிபண்ணுகிறவனையும்நம்மைநமஸ்காரப்பண்ணுகிறவனையும் நம்முடைய கீர்த்தனைகளை நாள்தோறும் பாராயணஞ்செய்கிறவனையும் நம்மைஹரிஹரியென்றுமனதில்தியானம்பண்ணிவாக்கில்ஸ்தவுத்தியம்பண்ணுகிறவனையுமவன் வமிசத்தாரையுங்காப்பாற்றிமுடிவில்சகலசம்பிரமத்தோடுவைகுந்தத்தில்பரமபாக

வத கூட்டத்திலிருந்து சேவைசெய்யும்படி பிரகாசித்தருளுவோம் அப்பால் அவர்கள் நமது திவ்யரூபத்தையும்பெற்று மோட்சத்தைப் பெறுவார்கள்.

ஆகையால் நீநம்முடையவிமானத்தையுமேபூஜாயோக்கியனுயிருந்து சார்வதாபூசைசெய்யவேண்டும் சுயம்பா யுண்டானமூர்த்திகரந்தவிர மற்றதெல்லாம் ஒருவரால் நிருமிக்கப்பட்டதாம் அக்தெப்படியென்றால் மாங்கல்லுகள் மிருத்துகள் இதுகளால் நிருமிக்கப்பட்டதுகளுக்கு வஸ்துத்திரயமென்று சொல்லப்படும் இதுவுமல்லாமல் சிறிது செங்கல் பொன் வெள்ளிசெம்புகளாலும் நிருமிக்கப்படும் நாம்அந்தவிக்கிரகங்களில் அர்ச்சாவதாரஞ்செய்து பூரண வியாபகமா யிருப்போம் அதுகள் சிற்பசாஸ்திரக்கிரமப்படி நிருமித்துவைக்க வேண்டும் எப்படி நிருமிக்கவேண்டுமென்றால் அதிகஅங்கமுமாகாது குறைந்தஅங்கமுமாகாது சமமாகவிருக்கவேண்டும் ஆகாசத்தைப்பார்த்தபார்வையாகவும் பூமியைப்பார்த்த பாரவையாகவு மிருக்கப்படாது வுக்கிரபார்வையாகவு மிருக்கப்படாது சமதிஷ்டியான பார்வையா யிருக்கவேண்டும் மகாசவுந்தரிய ரூபலாவண்ணியமாய் குளிர்ந்தபார்வையோடு புன்சிரிப்பும் சிவகளையுமாய் சிற்பசாஸ்திரவிதிப்படி செய்வித்துகிரமப்படி பிராமணபிரதிஷ்டை செய்வித்த விக்கிரகத்தைவைத்து பரிசுத்ததிரவியங்களால் பூஜாயோக்கியந்தவறுமலிருந்து பூசைபண்ணவேண்டும் நாம்இப்போதுசொன்ன விதிமார்க்கமெல்லாம் இந்தலோகத்தி லுண்டான ஸ்தலங்களிலுள்ள கோயில்களுக்கு விக்கிரகங்களுக்கு மென்று தெரிந்துகொள்வாயாக.

இந்த ரங்கஸ்தலமும் ரங்கவிமானமும்சுயம்பாக வுண்டானதேயல்லாமல் ஒருவரால் நிருமிக்கப்பட்டதல்ல இதுபோல தெய்வீகமாய் சுயம்பாயுண்டாகி விளங்கப்பட்ட ஸ்தலங்கள்ஏழுண்டு அவையெவையென்னில் திருமுட்டம் திருவேங்கடாசலம் சாலக்கிராமபர்வதம் நைமிசாரணியம் தட்சணசமுத் திரத்தில் வானமலைஉத்திரதிசையில் புட்கரக்ஷேத்திரம் நாராயணசிரமமென்று சொல்லப்பட்டதுகளாம் இநதஏழுஸ்தலங்களுடன் திருவரங்கமென்று ஆகஎட்டுஸ்தலங்களும் சுயம்பாக வுண்டானதுகளென்று சொல்லப்படும்.

இனிதேவதைகளால் நிருமிக்கப்பட்ட ஸ்தலங்களையும் விவரமாகச்சொல்லுகிறோம் எப்படியென்றால் ஓய்பிர்ம்மாவே சிறிதுநாளுக்குப்பிறகு நீகாஞ்சிபுரத்தில் அசுவமேதயாகம் செய்யப்போகிறு யபடியாதநாம் நீசெய்யப்பட்டஎக்கியகுண்டத்தில் யக்கிய வரத

ரங்கப்பெருமாளென்னும் பெயருடன் அவதாரஞ்செய்வோம் அப்போது நம்மை நீஅஸ்தகிரியென்று மலைமேல்வைத்துப் பூசைபண்ணுவாய் தென்சமுத்திரத்தில் அனந்த பத்மநாபனென்னும்பெயருடன் பள்ளிகொண்ட திருக்கோலமாய் அவதாரஞ் செய்யப்போகிறோம் அங்கே நம்மை அனந்தனென்னும் ஆதிசேஷன் பூசைபண்ணுகிறான் கர்ணிகாபுரத்தில் நம்மைவிசுவகர்மா பூசைபண்ணப்போகிறான் அசுவதீர்த்தத்தில் நம்மை அசுவனிதேவதைகள் பூசிக்கப்போகிறார்கள் சக்கரதீர்த்தமென்னும் திருப்பல்லாணியில் நம்மையிந்திரன் பூசிக்கப்போகிறான் உற்பலாகவத்தில்பூமிதேவி பூசிக்கப்போகிறாள் கிருஷ்ணமங்கள க்ஷேத்திரத்தில் வருணன்பூசிக்கப்போகிறான் துவாரகாபுரியில் அக்கினிதேவன் பூசிக்கப்போகிறான் அடித்திருப்பதியில் வாய்வுதேவன்பூசிக்கப்போகிறான் விஷ்ணுதீர்த்தத்தில் ஆகாசவாணியும் கும்பகோணத்தில்தேவர்களும் இராட்சதர்களும் சாரக்ஷேத்திரமாக திருக்கொறையில் காவேரியும் அன்னதீர்த்தத்தில் அன்னதேவதையும் சொற்கவாசலில் அதிதிகளும் திருக்குற்றாலத்தில் ஏகாதசருத்திரர்களும் திருநாராயணபுரத்தில் வேதபுருஷனுமாக நம்மைபூசிக்கப்போகிறார்கள்மேற்சொல்லியஸ்தலங்கள்தோறும் மேற்சொல்லிய தேவதைகளே பிரதிஷ்டைபண்ணி நம்மைப்பூசிக்கப்போகிற டியால் அந்தஸ்தலங்களையுந் திவ்யஸ்தலங்களென்றுசொல்லப்படும் இதுவுமல்லாமல் ரிஷிகளால் நம்மைப்பூசிக்கப்படும்ஸ்தலங்களுண்டு அதுவுஞ்சொல்லுகிறோம் அவையெவையெனில் திருநெல்வேலியில்சுக்கிரபகவான் மார்க்கண்டேயரும் பூசிக்கப்போகிறார்கள் மந்தரட்சேத்திரத்தில் மரீசிமுனிவரும் சித்திரக்கூடமென்னும்சிதம்பரத்தில் பதஞ்சலிமுனிவரும் தாமரபர்ணியில் அகத்தியமுனிவரும் சத்தியகிரியென்னுந் திருமயத்தி லிந்திரதும்மனென்னு மிராச ரிஷிகளும் கொங்கில் பாண்டுமுனிவரும் சீகரமென்னும் ஸ்தலத்திற் குபேரனும் நந்திபுறத்திற் பிலிச்சக்கிரவர்த்தியும் குப்பத்துவாரத்தில் மகோதரனும்வியாசதீர்த்தத்தில் வியாசமுனிவரும் பெண்ணைக் கரைத்தீர்த்தத்தில் மைத்திரேயமுனிவரும் சவுனகாசிரமத்தில் சவுனகமுனிவருமாகநம்மைப்பூசைபண்ணி அவர்கள் இஷ்டசித்தினையநம்முடைய கிருபாவீட்சண்ணியத்தினலே யடையப்போகிறார்கள் அந்தஸ்தலங்கள் முழுதும் முநீஸ்வரர்களால்பிரதிஷ்டைபண்ணுவித்து நம்மைப் பூசைசெய்யப்போகிறபடியால் இந்தஸ்தலங்களையும் திவ்யக்ஷேத்திரங்களென்றேசொல்லப்படும் இதுவுமல்லாமல் இன்னம்பலக்ஷேத்திரங்கள் மனுஷர்களால் நிருமிக்கப்பட்டு அந்தக்ஷேத்திரங்கள்தோறும் வேதசாஸ்திரக்கிரமப்படி நம்

மைப் பிரதிஷ்டைபண்ணுவித்துச்சகலரும் பூசிக்கப்போகிறார்கள் இப்படிமூன்றுவித பிரதிஷ்டைகளாலுண்டாக்கி விளங்கப்பட்டஸ் தலங்களையே நூற்றெட்டுத்திருப்பதிகளென்றுசொல்லுவார்கள்.

இந்த நூற்றெட்டுத் திருப்பதிகள்தோறும் அந்தந்தவிக்கிரகங் களில் வியாபித்து அந்தந்த விக்கிரகசவுந்திரியத்துக்குத் தகுந்தசே வைசாதித்தருளி நம்மைபயபக்திவிசுவாசத்துடன் சேவிக்கின்ற ப ரமபாகவதர்களுக்கு இஷ்டசித்திகளைப் பிரசாதித்தருளுவோம். அ துகளில் சுயம்பாகவுண்டான எட்டுஸ்தலங்களிலும் சேவிக்கின்றவ ர்களுக்கு அதிகமான விசேஷபலபிராபதிகளைக் கொடுத்தருளுவோ ம் இந்தசுயம்பாகிஎட்டுதலங்களுக்கும் சுற்றிலும் நூறுயோசனைது ரமட்டும் புண்ணியக்ஷேத்திரங்களென்றே சொல்லப்படும் அந்த க்ஷேத்திரங்களில் இறக்கப்பட்ட சீவராசிகளுக்கு மரணவேதனையி ல்லை மோட்ச சம்பத்துண்டு அப்பால் தேவதைகளால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட ஸ்தலங்களுக்கோவென்றால் சுற்றிலும் ஏழுயோசனை தூரமட்டும் புண்ணியஸ்தானங்களென்றே சொல்லலாம் முனிவர்க ளால்பிரதிஷ்டை பண்ணப்பட்டதலங்களுக்கோவென்றால் சுற்றிலு ம் ஒருயோசனைதூரமட்டும் புண்ணியஸ்தானங்களென்று கூறப்படு ம் மனுஷர்களால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட ஸ்தலங்களோவென் றால் அந்தஸ்தலங்களையே புண்ணியக்ஷேத்திரமென்று சொல்லப்ப டும் இப்படிப்பட்ட ஸ்தலங்களில் ஜெனனம் எடுத்தபேர்களுக்கும் சார்வதாவாசஞ்செய்தவர்களுக்கும் இறந்தபேர்களுக்கும் மோட்ச மேயல்லாமல் நரகமில்லை

ஒய் பிர்ம்மதேவனே மேலும் அவரவர்கள் வாசம்பண்ணப்ப ட்டகிரகங்களில்நம்முடைய அர்ச்சாவதாரமான விக்கிரகங்களை வை த்துத்தினந்தினம் திருவாராதனஞ் செய்துவருவார்களாகில் அந்த வீடுகளையும் புண்ணியக்ஷேத்திரமென்றேசொல்லப்படும் அந்தவீட் டில்தனசம்பத்தும்தானியசம்பத்தும் புத்திரசம்பத்தும் பந்துஜன விர்த்தியும்பசுவிர்த்தியும் நஞ்சைமுதலான பயிர்விர்த்தியுமுண்டுஅ ந்தவீட்டில் அஷ்டலட்சுமிகளும் தாண்டவஞ்செய்வார்கள் அவர்கள் தலைமுறையிலுள்ளபிதிர்களுக்கு நரகமேயில்லை இதுவுமல்லாமல் சா லக்கிராமம்வைத்துப்பூசைபண்ணுவார்களாகில் அந்தகிரகத்தைச் ச யம்பாகிய புண்ணிய ஸ்தலத்துக்குச்சமானமாகச்சொல்லப்படும்அ ப்படிபூசிக்கப்பட்ட பாகவதர்களைச் சாட்சாத்ஹரிசொரூபமென்று ஸ் தோத்திரஞ்செய்யாமல்மனிதராகப்பாவித்தவர்களுக்கு நரகமேகதி யாகும் அல்லாமலும்நம்முடைய ஆலயத்தின்கோபுரங்கள்சிகரங்கள்

விமானங்கள் தோற்றப்படாத நாடுகளும் நகரங்களும் பறச்சேரிக ளாகும் இந்ததிருவரங்கத்தைச்சுற்றி இரண்டுயோசனைதூரத்திற்கு ள் ளிருக்கின்றபேர்கள் சண்டாளர்களானாலும் குருதுரோகிகளானா லும் திருடர்களானாலும் அவர்கள் இந்தபுண்ணியக்ஷேத்திரப் டலத் தினல் நம்முடையலோகத்தை பெறுவார்கள் இந்தக்ஷேத்திரங்களி லுண்டான பசுபட்சிமிருகங்களும் நாய்நரிகளும் கழுதைகளும்பசா சுகணங்களும் க்ஷேத்திரமகிமையினல் நம்முடைய கிருபாகடாட்ச முண்டாகிப் புண்ணியசென்மங்களையடையும் அதில் பெண்சென்ம மாகப்பிறந்து புத்தியில்லாதவளாய் மகாபாபிஷ்டியாக பத்தாவின் கருத்தறிந்து பணிவிடைசெய்யாதவளாய் கடுமையான சொல்லையு டையவளாய்பத்தாவினசொல்லைக்கடந்து நடக்கின்றவளாய் சற்குரு வுந்தேவபக்தியில்லாதவளாய் குடும்பவிரத்தியில்லாதவளாய் மாமி மார்க்கிதஞ்செய்யாதவளாய் பத்தாவுக்கு உபசரித்து உண்டியுதவா தவளாய்பாத்திரமறிந்து பிட்சையிடாதவளாய் சுசிஇல்லாதவளாய் விபசாரிகளுடனேசகவாசம் பண்ணுகின்றவளாய் வாக்கினுனிடை விடாமல் ஈனமானதுற்பாஷைகளையே வசனிக்கின்றவளாய்பொரு ளாசையினல் விபசாரம் பண்ணுகின்றவளாயிருந்தும் அவள்பிறந் தஸ்தலமகத்துவத்தினல்நம்முடைய பரிபூரணகடாக்ஷம்பெற்று நல் லபிறவியைப்பெறுவாள்.

இப்படிப்பட்ட மாயாசம்பந்தமான ஜென்மங்களெடுத்து கா மபந்தங்களிலகப்பட்டுத்திரியும்படி விநோதம்பண்ணி நடத்துவிக் கிறதெல்லாம்நாமேயொழிய வேறொருவரில்லை பெண்சென்மமெடு த்தபோதிலும் (கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை) என்னும்ப ழமொழிப்படிபத்தாவின்சொற்படி நடப்பவளாய் அவனதுபணிவி டைகளைத் தவறாமல் ஊழியக்காறிபோல் நடத்துகின்றவளாய் கால மறிந்து தாயைப்போல் வுபசரித்து உண்டியுதவுகின்றவளாய் புண் ணியபாவமறிந்து அதிதிகளுக்குப் பிக்ஷையிடுகின்றவளாய் குடும்ப விர்த்திசெய்விக்கின்றவளாய்சாந்தகுணமுடையவளாய் இன்சொல் லையுடையவளாய் விரதநோன்புகளைச்செய்கிறவளாய் பிதுர்தினங்க ளில் மகாசுசிகரமாயிருந்து சமையல்செய்கின்றவளாய் துற்பாஷை கள்வசனிக்கத்தெரியாதவளாய் சொற்பனத்திலும் பரபுருஷகவன ம்பண்ணுதவளாய் சத்தியவசனத்தை யுடையவளாயிருந்தால் அவ ள் எந்தச்சாதியாயிருந்தபோதிலும் அவளெந்த விடத்திற் பிறந்த வளானாலும் அவளையே கற்புள்ளஸ்திரீகள் தெய்வமென்றுசதாகால மும் கைகுவித்து நமஸ்காரம் பண்ணுவார்கள் அந்தபதிவிரதையி னடைய பெருமை யிவ்வளவென்று ஒருவராலுமளவிட்டு சொல்லிமுடி யாது அவளிருக்கப்பட்டயிடமே ஸ்ரீவைகுந்தமென்றும் கயிலாச மென்றும் சொர்க்கமென்றும் சொல்லலாம்.

மேலும்பூலோகத்தில் ஞானவான்களாயிருக்கப்பட்டபக்தசனங்கள்பஞ்சராத்திரிகிரமத்தோடு நம்மைத்தினம்ஒருகாலமானாலு மிரண்டுகாலமானாலும் மூன்றுகாலமானாலும் அஞ்சுகாலமானாலும் திதிருவாராதனஞ்செய்வார்களானால் அவர்களுடைய பூசாபலத்தை இவ்வளவென்று மட்டிட்டு இந்திராதிதேவர்களாலுஞ் சொல்லிமுடியாது அவர்களிருக்கப்பட்ட ஸ்தானமே பரமபதமென்று அவர்களேபகவானென்றுசொல்லலாம் பஞ்சராத்திரிகிரமமாவதெப்படியென்றால் பிராதக்காலத்தில் எழுந்திருந்து ஸ்நானமுதலியசகலகர்மங்களையுமுடித்துக்கொண்டு நந்தவனத்திற்புகுந்து திருத்துழாய்முதலியசுகந்தபுஷ்பங்கள்வகைவகையாய் சம்பாதித்துக்கொண்டு ஓமதிரவியங்கள் சம்பாதிக்கவேண்டும் பிற்பாடு உபதானம்வாங்கிப் பஞ்சயெக்கியம் பண்ணவேண்டும் நமதுவிக்கிரகதியானமறியவேண்டும் அஷ்டாட்சரசெபஞ் செய்யவேண்டும் திரிகாலமும் தப்பாமல் சந்திரிகாலமும்தப்பாமல் சந்தியாவந்தனம் பண்ணவேண்டும்இப்படிசெய்யப்பட்டபரமபுருஷர்களைப்பஞ்சகாலபாராயணமென்று சொல்லப்படும்இப்படிநம்மை ஐந்துகாலமும்ஆராதிக்கின்றவனே மோட்சவதிகாரியாவான அதற்குசந்தேகமில்லைஅவன்வேண்டினால் யாருக்குமோட்சங்கொடுத்தாலு மவனுக்குசமானுக்கிரக சாமார்த்தியமுண்டு.

ஆகையால் ஓய் பிரமதேவனே நீமகாவுத்தம புருஷனாகையால் நமது துவாதசநாமங்களை இடைவிடாமல்தியானித்து அஷ்டாட்சரங்களைச்செபஞ்செய்வாயாகில் நூறுவருஷகாலம் பிரமபட்டத்தையாண்டு அப்பால் நம்முடைய பாதத்தில்வந்து சேருவாய் சப்தகோடிமகாமந்திரங்களைச்செபம்பண்ணினவன் காயத்திரிசெபம்பண்ணுகிறதற்கு அதிகாரியாவான் எழுசனமங்கள் யாத்திரிச்செபம்பண்ணினவன்வேதாத்தியயனஞ்செய்து எக்கியத்துக்கதிகாரியாவான் அப்படிஅனேகசென்மங்களெடுத்து எக்கியங்கள்பண்ணி தபசுபண்ணினவனுக்கு நம்மிடத்திற்பக்தியுண்டாகும் நம்மிடத்திற்பக்தியில்லாதவனுக்கு துவாதசநாமங்களும் அஷ்டாட்சரமும்வரமாட்டாதுஇந்திரியநிக்கிரகம்பண்ணி அஷ்டாட்சரத்தை செபம்பண்ணினவனுக்குபாவகிர்த்தியங்க ளணுகமாட்டாது சாவகாசகுணத்தினால்ஒருவேளைநேரிட்டபோதிலும் அவனுக்குநரகம்வராது வாசுதேவனாகியநம்மிடத்தில் பக்தியுள்ளவனாயிருந்தாலும் அவன்செய்தபாவங்களை நாமேகண்டித்துபரிகாரஞ்செய்வோம் எமனால்கண்டிக்கப்படாது நம்மிடத்தில்பக்தியுள்ளவனுக்கு ஒருபாவமுமில்லை பலவியாதிகளுமில்லைஅவனுக்குசராசரத்தில் அனாயாசமரணத்தைக்கொடுத்து வைகுந்தத்திற்சேர்த்துக்கொள்ளுவோம் அகந்தையாகியநிந்தைகள்செய்து கொர்வத்தினால் மகாபாதகத்துள்ளாகி நம்மிடத்திற்பக்தியில்லாதவனாயிருப்பானாகில் அவன்எமதண்டனைக்குள்ளாகி இந்தநரசென்மத்தைவிட்டுபிறவாதசெனனங்களிற்பிறந்து துக்கத்தையனுபவிப்பான் இதுவுமல்லாமல் எவனாகிலுமதினமானம் மகாபக்திவிசுவாசத்துட

ணேமாதா பிதா குரு இவர்களைதெய்வமாகபாவித்து பூசையண்ணு வாளுகில் அந்தபூசை நமக்குபண்ணினபூசையாகும் இப்படிசன்மார்க்கமானவிஷயங்களைச்செய்யாமல் துன்மார்க்கமானவிஷயங்களை நடத்துகின்றவன் மகாபாபிஷ்டனும் இகபரசாதனங்களில்லாதவனுய்யாவராலும்பாவியென்றுசொல்லப்பட்டு ரவுரவாதிநரகத்துக்காளாவான் அவனுடையவம்சத்தாரும் நரகத்தைவிட்டுக்கரையேறமாட்டார்கள்நம்மிடத்தில் பயபக்தியாய்க்கிரமப்படி நடக்கின்றவர்களுக்குஒருபயங்கரமுமில்லை யாதனையுமில்லை.

ஓய்பிரமதேவனே தேவர் மனிதர் பட்சி மிருகம் ரிலத்திலூர்வனசலத்திலூர்வன ஸ்தாவரமென்றுசெல்லப்பட்ட எழுவகைப்பிறவிகளிலும் மானிடப்பிறவியெடுப்பதரிது அதிலும் பெண்ணும் அலியுமின்றி ஆண்சென்மமாகபிரப்ப தரிதுஅதிலும்கூன்குருடுசெவிடுமுடம் நீங்கிப்பிறப்பதரிது அதிலும் உயர்ந்தகுலத்திற்பிறப்பதரிது அதிலும் உயர்ந்தகுடியிற்பிறப்பதரிது அதிலும் அவிவேகமின்றி விவேகியாய்ப்பிறப்பதரிது அதிலும் வைஷ்ணவனுகப்பிறப்பதரிதுஅதிலும்பாஞ்சராத்திரக்கிரமந்தெரிந்த ஆசாரியனை யடுத்து அட்டாட்சர மந்திரோபதேசம்பெற்றுக்கொண்டு நம்மைமிடைவிடாமல்திரிகாலமும் பூசைபண்ணுவதரிது அதிலும் வேதசாஸ்திரபுராணவிதிகாசங்களை விசாறித்தரிந்து சித்து அசித்து ஈஸ்வரனென்னு மூன்றுபதார்த்தங்களையும் ஆசாரியன்முன்னிலையில் சந்தேகவிபரீதமாய்க்கேட்டறிந்து விசிட்டாத்து விதநிலையைப்பொருந்திநிற்பதரிதுஇப்படித்தெளிந்தவனையே பரமபாகவதனென்றும் மகாபுருஷனென்றும்யோகவானென்றும் ஞானவானென்றும்பிரமானுபவியென்றும் பிரமஞானியென்றும்கிருத்திகிருத்தியனென்றுஞ் சொல்லப்படும்.

மேலும் அகண்டபரிபூரண சச்சிதானந்தபரப்பிரமசொருபமாய்விளங்கப்பட்டநாமே பிர்மாவிஷ்ணு ருத்திரனென்று சொல்லப்பட்டதிருமூர்த்திவடிவங்கண்டு ஆக்கல் அளித்தல் அழித்தலாகியமூன்றுகிருத்தியங்களையும்நடத்துவோம் பஞ்சமூர்த்தி வடிவமாகவும் விளங்குவோம இன்னம் அனேக மூர்த்தி கரங்களாகவும்பிரகாசிப்போம் ஆகையால்பூலோகத்தில் நரஜன்மமாகப்பிறந்தவர்கள்நம்மிடத்திற்பக்தியாய் நல்வழிபட்டு நடக்கவேண்டுமென்று திருவுளம்பற்றியருளினர் கேட்டீரோநாரதரேயென்று பரமசிவன் திருவாய்மலர்ந்தருளினர் அதுகேட்டு புராதமுனிவரும் ஆச்சரியமடைந்து யிருந்தவிடத்திலேயே ஸ்ரீரங்கமிருக்குந்திசையைநோக்கி ஸ்ரீரங்கநாதாவென்றியானித்து சும்மாயிருந்தார்.

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று

—oo✱oo—

# ஆறும் அத்தியாயம்.

—∘∘❀∘∘—

## துதிகவி-விருத்தம்.

மந்திரஞ்சேர்சமதக்கினேனு கைட்டாற் பரசிர யப்பேர்பெற்ற மைந்தனுப்ததோன்றி மறையோர்க்கிடர்செய்தல்நெறியையமாயாவே ந்தன், செந்தமுறுங்குலமுழுதுமறச்செகுத்தகம் மறைபொருளாந்து ணையாய்நின்று, சிந்தைமகிழந்தரங்கததில் ராவணே மேற்கணவளர்ந்த சிதரனே போற்றி.

அப்பால்நாரதபகவானெழுந்திருந்து கைலாசபதியாகிய சாம் பவமூர்த்திக்குதண்டனிட்டு சுவாமிதீனதயாளாதிரிபுரசுந்தரிம ணுகராதேவரீர்திருவாய்மலர்ந்தருளிய திருவரங்கததின்பிரதாபத தைக்கேட்கக்கேட்கவிநோதமாயிருக்கின்றது ஆகையினுல் பிரமதே வருக்குபெருமாள்கடாட்சித்தவரப்பிரசாதங்களையும் அதற்குமேல ந்தபிரமதேவர்நடந்தருளியகிரமத்தையும்சவிஸ்தாரமாய்ச் சொல்லி யருளவேண்டும் என்றுவிண்ணப்பஞ்செய்ய பரமசிவன் திருவுளம்ப ற்றி யருளுகின்றார் கேளுமையாநாரதமுனிவரே அதற்குமேல்பிரம தேவன் யெழுந்தருளிவந்து அந்தபெருமாளுக்கு அனேகமாயிரநம ஸ்காரம் வந்தனைவழிபாடுகள்செய்து சுவாமி வைகுந்தவாசா வரத ராசா தேவதேவா தீனரட்சகாதேவரீரை அடியேன் நாள்தோறும் பூசைபண்ணுகிறதற்கு மந்திரமும் சங்கற்பமும் அப்படிவிதிதவரு மல்செய்யப்பட்டபூசையினுலுண்டாகும் பிரயோசனமும்இன்னதெ ன்று பிரசாதித்தருளவேண்டுமென்றுவிநயமாகக்கேட்க அந்தபெரு மாள் மனமிரங்கி பிரமதேவனைப்பார்தது வாரும்பிர்மாவே நீகேட் டபடியேசொல்லுகிறோம்.

எப்படியென்றால் இந்தபாஞ்சிராத்திரத்துக்குள் சததுவமென் றும்புட்கரமென்றும் இரண்டுசங்கல்பமுண்டு அவ்விரண்டுசங்கற்ப முமறிந்தஆசாரியரிடத்தில் தீட்சைபண்ணிக்கொண்டு சிற்பசாஸ்திர க்கிரமப்படி பஞ்சலோகங்களினுற் செய்திருக்கப்பட்ட விக்கிரகத தைவைத்து பாஞ்சராததிரிக்கிரமமந்தெரிந்த அஞ்சுபேர்உருத்திரா களோடிருந்துதிருவாராதனஞ்செய்யவேண்டும்முன்னே துவாதசநா மங்களையுந்தியானிக்கவேண்டும் பிற்பாடு அட்டாட்சரமந்திரத்தைச் செபப்பண்ணவேண்டும் மற்றொருபதார்த்தங்களிலும் ஆசைவையா மல்பிராசையுள்ளவனுயிருந்து எம்மிடத்தில்மாத்திரம் ஆசைவைத து பூசிப்பானுகில் அவன்நமது சொச்சருபவான் அப்படிபூசிதபேர் கள்உனக்குமுன்பாகயிருந்த ஒன்பதுபிர்மாக்கள்அதுவல்லாமல்தே வேந்திரன்முதலானசகலதேவர்களும்சப்தரிஷிகள் முதலானமுனிக் கூட்டங்களும் ஒவ்வொருபிரயோசனத்திலாசைவைததது நம்மைப்பூசி த்துநானுவிதமான தர்மகர்மங்களிற்சந்தப்பட்ட அவரவர்கள்செய் தகாமியத்தபோலத்திற்குத்தகுந்த அதிகாரசம்பத்துகளை யனுபவித் துததொலைத்து திரும்பத்திரும்ப அனேகஜென்மங்களையெடுத்தெடு

ததுஅந்தச் சென்மஙகள்தோறும் நம்மையிடைவிடாமல்பூசிததநிட்காமியதபோபலததினால்தேவதததுவததையடைந்துபிறகு மோட்சததைப்பெறுவார்கள்.

எவனாகிலும் ஒருபொருளிலும் ஆசையின்றி நிராசையாயிந்துளம்மைபூசிப்பானாகில் அவனெப்பொழுதும் வைகுந்ததில் நம்முடையதிருவடியைவிட்டு நீஙகாமலிருப்பான் நம்மைபூசிப்பவர்கள் மனுஷர்களாயிருந்தாலும் தேவர்களாயிருந்தாலும் முனிவர்களாயிருந்தாலும்ஒருபலபிராயதியைநாடி பூசைபண்ணுவாராகில் அவர்கள் திருமபத்திரும்பஅனேகசென்மமெடுக்கவேண்டும் உலகததில் இதமாயிருக்கப்பட்டஅனேகதானதர்மஙகளைச்செய்து அஸ்வமேதயாகமுதலான நானாவிதயாகஙகளைச்செய்து இந்திர பட்டததைபெற்றபோதிலும் அவன்ஆசாரியபக்தியில்லாதவனானால் அவனைஒருவரும் புகழ்ந்துக்கொள்ளமாட்டார்கள் அவனொருக்காலு மீடேரமாட்டான்நம்முடையபக்தனாயிருக்கிறவன்ஒருவேளை அறிந்து மறியாமலாவது ஒருபாபகர்மங்களைச்செய்வானாகில் நாமவன்பேறில்கடாட்சம்வைத்து அந்தச்சென்மததிலில்லாவிட்டாலும்மறுசென்மத்திலாகிலுமவனுக்கு மோட்சஙகொடுததருளுவோம் இந்தபிரபஞ்சமெல்லாம்விஷ்ணுமயமென்னவேண்டும் அப்படியெண்ணுகிறவன் கோடியிலொருமகாபுருஷனும் சந்திரசூரியர்களும் பலவிதமானபிறவிகளிற்பிறக்கவேண்டும்.

நம்முடையதுவாதசநாமஙகளையும் அட்டாட்சரததையுந் தியானம்பண்ணுகிறவன் வேறொருபிறவியிற்பிறக்கமாட்டான் நம்முடையபக்திசெய்கிறவனே உததமபுருஷன் இழிவானசண்டாளவம்சததிற்பிறந்தவனாயிருந்தாலும் நம்மிடததிற்பக்திசெய்வானாகில் அவனே பரமபுருஷன் எததனையுயர்வான குலததிற்பிறந்தவனாயிருந்தாலும் நமதுபக்தவசனஙகளை நிந்தனைபண்ணுவானாகில் அவனேசர்வசண்டாளன்நம்முடையபக்தனானவன் கோஹததி பிரமஹததி சிசுஹததிஸ்திரீஹததிமுதலான மகாபாதகஙகளைச்செய்தாலும் ஆசாரவீனனாயிருந்தாலும்அவன்நம்மைஎப்போதும்பசனைபண்ணுகிறபடியால் அவனே புருஷசிரேட்டன் இரங்கமகத்துவததை யறியாமல் நிந்தனைபண்ணினால் அவனே பரமசண்டாளனும் மனுஷராகபிறந்தபேர்கள் திருவரஙகததை ஒருதரம் மனதிலேநினைததபோதிலும் அவர்கட்குச்சொற்கமுண்டாகும்நரகமெல்லாம்பாழாய்போகும் ரஙகமென்றுவசனிக்கததெரியாத ஒருமூடனுக்குபோடுகிற அன்னததைநாய்க்குபோடுகிறதே உததமம் பூலோகம் சொர்க்கலோகமுதலானஎந்தலோகாந்தரஙகளிலிருக்கிறவனானாலு மரஙகமிருக்கும் திசைநோக்கி அஞ்சலியஸ்தனாய்நின்று தெண்டனிட்டு நமது துவாதசநாமஙகளையும் ஸ்தவுததியம்பண்ணுவானாகில் அவனே புருஷரதனமாகையால் ஓய்பிரமாவே நீயும் பரிசுததனாயிருந்து பயபக்திவிசுவாசததுடனே அர்க்கியம் பாததியம் ஆசமனம் ஸ்நானம் வஸ்திரம் அலங்காரம் எக்கியம் கந்தம தூபதீபம் நைவேத்தியம்

மந்திரம் புஷ்பம் பிரதக்ஷணம்நமஸ்காரம் குடைவெண்சாமரைஆல வட்டம்விசிறி கண்ணாடிமுதலான சர்வோபசாரங்களுஞ் செய்துந ம்லமப்பூசைபண்ணென்று ஆக்கியாபித்துபெருமாளும் ஸ்ரீரங்கவிக் ரகரூபமாய்திருவாய்மலரை மகிழ்ந்தருளினர்.

திருவரங்கமென்றுசொல்லத் தெரியாதமூடனுக்குப்போடுகிற அன்னத்தை நாய்க்குப்போடுவதேஉத்தமமென்றுபகவான்கட்டளை யிட்டருளியதற்கு காரணம்.

தொண்டரடிப்பொடியாழ்வார் கவி.

வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை
கொண்டனமீதணவுஞ்சோலைக் குயிலினங்கூவுஞ்சோலை
அண்டகோனமருஞ்சோலை யணிதிருவரங்கமென்னு
மிண்டர்பாய்ந்துண்ணுஞ்சோற்றை விலக்கிநாய்க்கிடுமினீரே

என்றதனாற்காண்க.

அப்பால் பிர்ம்மதேவனும் ஸ்ரீரங்கநாயகர் கட்டளையிட்டருளி யபடியே மகாபயபக்தி விநயத்துடன் அவ்விடத்தில் அந்தவிமான த்திற்குச் சகலோபசாரங்களும்குறையாமல்நடப்பித்துச் சிறிதுகா லம்பூசைபண்ணி அதன்பிறகுஅந்தவிமானத்தைச்சிரசின்மேல்தாங் கிக்கொண்டுஹரிஹரி நமோவென்றும் ஸ்தோத்திரஸ்தவுத்தியங்களு டனேநடந்து சத்தியலோகத்தில் விரசாநதிதீர்த்தத்திற்கொண்டு போய்வைத்துதான் அந்தநதியில்ஸ்நானம்பண்ணி ஐப்பசிமீ கிரு ஷ்ணபட்சம் துதிகைதிதிரோகணிநட்சத்திரம் இப்படிக்கூடினபுண் ணியதினத்தில் பெருமாள்திருவாக்கருளியபடி சாஸ்திரயுத்தமாய் பாஞ்சாரத்திர லக்கியங்களறிந்த பஞ்சருத்திரர்களுடனிருந்து அர்க்கியபாத்தியஆசமனமுதலான சர்வோபசாரங்களுந் தவறாமல் பூசைபண்ணி அப்பால்திருவோணநட்சத்திரபுண்ணியகாலத்தில் அ ந்தவிமானத்திற்குமங்களஸ்தானம்பண்ணுவித்து பிற்பாடுபிர்மதே வன்மகாசந்தோஷகரமாய் சுயம்புவாதிமனுவான மனுக்களையும் த ட்சப்பிரசாபதிமுதலான பிரசாபதிகளையும் மற்றுமுண்டான தேவ தைகளையும் இன்னமூர்த்தனுக்குஆரிடத்திற்பிரீதியிருக்கின்றதோ அ வர்களெல்லாரையுமழைப்பித்து அவர்களையெல்லாம் அந்தநதியில் ஸ்நானம்பண்ணுவித்து பிற்பாடுஅவர்களுக்கு துவாதசநாமங்களையு ம் அஷ்டாக்ஷரமந்திரத்தையும் உபதேசம்பண்ணிப் பிறகுஅந்தவி மானமுண்டான தெய்வீகத்தையும்காண்பித்து தனக்குப் பெருமா ள் பிரத்தியட்சதரிசனமாயிருந்துபிரகாசித்தருளிய பூஜாகிரமங்களை யும் விதிதவறாமல் அவர்களுக்குப்போதித்து அவர்களெல்லாரையு ம்பரிசுத்தவான்களாக்கிஅந்தவிமானத்தை இடையுறாமலிருந்துதிரு வாராதனஞ்செய்விக்கும்படிசெய்தான் பிற்பாடுபிரமதேவன் சூரிய

னுவை அழைப்பித்து அவனுக்கும் அந்தப்பஞ்சாட்சரமந்திரக்கிரமத்தைச்சாங்கமாயுபதேசம்பண்ணி அந்தவிமானத்தைப் பூசை பண்ணும்படிசெய்வித்துத் தான்பிரமபட்டத்திலிருந்தான்.

அப்படியே அந்தச்சூரியதேவனும் பிரமதேவனுடைய கட்டளைப்படி அந்தத்திவ்யதேசோமயமாய் விளங்கப்பட்டவிமானத்தைச் சிறிதுநாள்பயபக்திவிசுவாசத்துடன் பூசைபண்ணிக்கொண்டுவந்தார்அப்பால்அந்தச் சூரியதேவன்வைவசுவதமனுவை அழைப்பித்து அவனுக்கு அந்தவிமானமுண்டான தெய்வீகத்தையுஞ்சொல்லிப் பிரம்மதேவன்தனக்குபதேசஞ்செய்தசகல மந்திரக்கிரியைகளையும் உபதேசம்பண்ணுவித்து அந்தவிமானத்தைப் பூசைபண்ணும்படி கட்டளையிட்டு அவன்தன்னுடைய ஸ்தானத்திற்குப்போய்விட்டான் அந்தவைவசுதமனுவும்சூரியதேவன் சொல்தவறாமல் பக்திவினயமாய்வெகுகாலம் பூசைபண்ணி பிறகுதன்குமாரனை இட்சுவாகுமகாராசனை அழைத்து அப்பாமகனே இந்தவிமானந்தெய்வீகமாயுண்டானது இதன்பெருமை ஆயிரம்சிரசும் இரண்டாயிரம் நாவுமுள்ள ஆதிசேஷனும்சொல்லிமுடியாது இதை ஆதியில்பிரமதேவர் பூசைபண்ணினார் பிறகு சூரியபகவான்பூசைபண்ணினார் பிறகு அவருடைய உபதேசம்பெற்றுக்கொண்டு நான் பூசைபண்ணினேன் ஆகையால நீ இப்போது பூசைபண்ணென்றுசொல்லி அவனுக்குச்சகலமந்திரக்கிரியைகளும்போதனை செய்வித்துஅந்தவிமானத்தை அவனிடத்தில் ஒப்பித்துப்போட்டு தான்பரமபதஞ்சேர்ந்தான் அதன்பிறகு அந்தஇட்சுவாகுமகாராசனும்தன்பிதாவினுடையசொல்தவறாமல் பிதாவைப்பார்க்கிலும்மகாபக்திமானாயிருந்து அனேககாலம்பூசைபண்ணி பிற்பாடு அந்தவிமானத்தைப் பூமியிற்கொண்டுவந்துசேர்ந்துச் சிறிதுநாள் பூசைபண்ணி பிறகு பெருமானுடையதிருவடியிற்சேர்ந்தான்.

பிற்பாடு அந்தஇட்சுவாகுமகாராசன் வம்சத்திற்பிறந்த ராசர்களனைவரும்கிரமந்தப்பாமல்பூசைநடத்திக்கொண்டு வந்தார்கள்அப்பால்பெருமாள் ராவணசம்மாரநிமித்தம் ஸ்ரீராமாவதாரமாய் எழுந்தருளினகாலத்தில் விபீஷணரிடத்தில் ஒப்புவைத்தார் அந்தவிபீஷணாழ்வாரும் உபயகாவேரிமத்தியில்வைத்துப் பூசைபண்ணிக்கொண்டுவந்தார்கள்அதுமுதல்இதுவரையிலும் அந்தக் காவேரிமத்தியிலேயிருந்துஇந்தக்கலியுகத்தில் மனுஷர்கையில்பூசிக்கப்பட்டு விளங்கிக்கொண்டிருக்கின்றது கேட்டீரோநாதரேயென்று பரமசிவன்திருவுளம்பற்றியருளினாரதுகேட்டுநாரதரும் சந்தோஷப்பட்டு ஸ்ரீரங்கவிமானத்தை மனதில்தியானித்துக்கொண்டுமவுனமாயிருந்தார்.

ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.

———

ஸ்ரீ

# ஏழாம் அத்தியாயம்

—•◊•—

அறுசீர்-விருத்தம்.

மணிவயல்சூழயோத்தியினிற் றசரதன்றன்மதலாமகத்திற்றோன்றி
அணிதொழும்சீதையைமணந்து கரனாதிநிசாசரர்களறக்கடிந்து
திணியவிராவணன்முதலோர்தமைச் செயித்துத்தேவர்பயநீர்த்தளி
த்துப், பணியணைமேலரங்கத்திற்கண்வளரும் ஸ்ரீராமபத்ராபோற்றி

அப்பால் நாரதமுனிவரெழுந்திருந்து கயிலாசபதியாகியபரமசிவனுக்கு நமஸ்காரஞ்செய்து சுவாமிகாளகண்டமூர்த்தி அந்தச்சத்தியலோகத்திற்கொண்டுபோய்வைத்துப பிரமதேவரால் பூசிக்கப்பட்டிருந்த ரங்கவிமானமமறுபடியும் பூலோகத்திற்குவந்தகாரணமென்ன அந்தவிமானத்தை இட்சுவாகுமகாராசாவுக்குப் பிரமதேவர்கொடுத்தகாரணமென்ன அதின்பிறகுசூரியவம்சத்தால் ராவணசம்மாரநிமித்தம் அவதாரஞ்செய்தருளிய ஸ்ரீராமமூர்த்தியானவர் அந்தவிமானத்தை விபீஷணருக்குக்கொடுத்த காரணமென்ன அந்தவிபீஷணர் அவ்விமானத்தைச்சோழதேசத்தில் காவேரிநதிக்கரையில்கொண்டுவந்து வைத்துப்பூசைபண்ணினகாரணமென்ன இந்தவர்த்தமானங்களெல்லாம் சவிஸ்தாரமாக திருவுளம்பற்றியருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தார்.

அதுகேட்டுப்பரமசிவனும் திருவுளமகிழ்ந்து அவ்வனம் விநயமாகக்கேட்ட நாரதமுனியைப்பார்த்து கேளுமையாநாரதரே இப்போது நடந்துவருகின்றபிரமகற்பத்திற்குச் சேதுவராககற்பமென்று பெயர் இந்தச்சேதுவராககற்பத்தில் வைவசுவதமனுவாந்தரங்கத்தில்முதலாவதுகிரேதாயுகத்தில் அந்தவைவசுவதமனுவுக்கு இட்சுவாகு மகாராசனென்கிற புத்திரன்பிறந்தான் அந்தஇட்சுவாகு பூலோகத்தில் அயோத்தியாபுரியென்னும் பட்டணத்துக்கு ராசாவாய்ப்பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான் அவன் பரமபாகவதருக்குள் சிரேஷ்டனானவன் மேலும்மகாவிஷ்ணுவுக்கு அஞ்சுகாலமுந்தப்பாமல் பஞ்சராத்திரக்கிரமப்பிரகாரம்பூசைசெய்யப்பட்டவன் அவனுக்குபாட்டனான சூரியதேவன்நாலுவேதமும் ஆறுசாஸ்திரமும் பதினெண்புராணங்களும் அப்பியாசம்பண்ணிவித்திருந்தான் அதின்பிறகுஇட்சுவாகு மகாராசனும்வசிஷ்டமுனிவரைக் குருவாக்கிக்கொண்டு அவரிடத்தில்மகாபயபக்திவிசுவாசத்துடன் சிஷனாயிருந்து சகலநீதிசாஸ்திரங்களையும் ஞானசாஸ்திரங்களையுமகற்றறிந்துசகலசாஸ்திரநிபுணனாயிருந்து அநேகயாகாதிகிருத்தியங்களைச் செய்து பூலோகத்தில் துஷ்டர்களாயிருக்கப்பட்ட அநேகராட்சதர்களைக்கொன்று ஜெயத்தைப்பொருந்தி ஐம்பத்தாறு தேசத்துராசாக்களுக்கும் முனிவர்களுக்கும் பிரியமுள்ளவனாயிருந்து அவர்களுக்கெ

ல்லாஞ்சதாகாலமும் உபகாரமேபண்ணிக்கொண்டு மகாநீதிபாளு யிருந்து பூலோகமுழுதும்ஒருகுடைநிழலின்கீழ் அரசாட்சிசெய்து வருங்காலத்தில்.

ஒருநாள் அந்தஇட்சுவாகுமகாருசனும் ஏகாந்தமாயிருந்து பூர்வத்தில்தன்னுடையபிதாக்களால் நடத்தப்பட்டிருந்த சற்கருமானுஷ்டானங்களைமனதில்நினைத்துக்கொண்டு ஒகோநாம இஞ்சிற்றுகினும் விஷ்ணுபக்திசெய்யாமல் அயிசுவரியமமதையடைந்து அநுவனாயில் விருதாகாலக்ஷேபமாய்நம்முடையவருஷங்களெல்லாம் வீணாட்களாய்க்கழித்துவிட்டோமே நம்முடையபிதாவாகிய வைவசுவதமனும் பாட்டனாகியசூரியபகவானும் சத்யலோகத்திற்குப்போய் சதுர்முகப்பிர்மாவைக்கண்டு அவரைஆசாரியராகக்கொண்டு அவருக்குவந்தனைவழிபாடுகள் செய்துஅவருடையகடாட்சத்தினலே ஞ்சாட்சரகிரமத்தை யறிந்துஅவரிடத்தில்தானே அஷ்டாக்ஷரமந்திரோபதேசத்தையும் பெற்றுக்கொண்டு அவருடையஅனுமதியின் பேரில் ஸ்ரீரங்கவிமானத்தை நெடுங்காலம்பூசைபண்ணினபடியால் அவர்கள்சகலமகிமையும்மோட்சத்தையும்பெற்றார்கள்அதுவுமல்லாமல்தேவேந்திரன்முதலாகிய சகலதேவர்களும் முனீஸ்வரர்களும்சத்தியலோகத்துக்குப்போய் அந்தவிமானத்தைபூசைபண்ணி ஸ்ரீவைகுந்தத்தையடைந்தார்கள் நாம்இந்தபூலோகத்தைவிட்டுச் சத்தியலோகத்திற்குப்போய் பூசைபண்ணக்கூடாது நம்முடைய பிற்காலத்தில் நமதுவமிசத்திற்பிறக்கப்பட்ட பிள்ளைகளும்சத்தியலோகத்திற்குப்போய் ரங்கவிமானத்தைக்கண்டு பூசைபண்ணிக்கிருதகிர்த்தியர்களாகமாட்டார்கள் சத்தியலோகத்திற்குப்போவது எவர்களுக்கும் அசாத்தியமாகவிருக்கும் ஆகையினால்இவர்களெல்லாம் எந்தக்காலத்தில் ஸ்ரீரங்கவிமானத்தைக்கண்டு பூசைபண்ணிக்கரையேறப்போகிறார்கள்

ஆதலால்நாமேதபசுபண்ணிநம்முடைய தபோபலத்தினால்அந்தத்திவ்யவிமானத்தைபூலோகத்தில்கொண்டுவந்துசேர்த்துப்பாஞ்சராத்திரக்கிரமந்தவராமல்அஞ்சுகாலமும்பூசையபண்ண அந்தப்பகவான்பாதாரவிந்தங்களைச்சேரவும் நம்முடையசந்ததிபிற்புறக்கின்றவர்களுக்குஅப்படியேஅந்தவிமானத்தைபூசைபண்ணிபரமபாகவதர்களாவார்களென்று ஆலோசனைபண்ணிதீர்த்தவைராக்கியத்துடனேஎழுந்திருந்துபோய் முனிவர்களுக்கெல்லாம்சிரேஷ்டராகியவசிஷ்டரிடத்திற்குப்போய்அவரைக்கண்டு சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்துஅவரிடத்திலேதான் ஆலோசித்துவந்தகாரியங்களெல்லாம்மகாவிநயத்துடனேவிண்ணப்பஞ்செய்தான்அந்தவிண்ணப்பத்தைக் கேட்டுவசிஷ்டமுனிவரும் மகாசந்தோஷத்தையடைந்துதமதுசிஷனாகியஇட்சுவாகுமகாராசனைபபார்த்துவாருமையாருசாவே அந்தப்பிரமலோகமாகியசத்திய லோகத்திலேயிருக்கப்பட்டரங்கவிமானம்நீர்செய்யப்பட்டதபோபலத்தினால்பூலோகத்தில்வரப்போகிறதென்றும்அந்தவிமான

தைப்பூசைபண்ணி உம்முடையவமிசத்திற்பிறக்கிறவர்களெல்லாம் பரமபதத்தைஅடையப்போகிறார்களென்றும் இன்னம்சிறிதுநாள்கழிந்துபிறகு உங்கள்சூரியவமிசத்தில் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே ஸ்ரீராமாவதாரம்பண்ணி இராவணசம்மாரஞ்செய்து பிற்பாடு அந்தராவணேஸ்வரனுடைய தம்பியாகியவிபீஷணருக்கு இலங்காபுரிபட்டணத்தைப்பட்டங்கட்டிவித்து அந்தவிபீஷணர் பூசைபண்ணும்படி ஸ்ரீரங்கவிமானத்தைகொடுக்கப்போகிறாரென்றும்அப்பாலந்தவிபீஷணாழ்வார்விமானத்தைமகாபயபக்தியுடனே கொண்டுபோய்சோழதேசத்தில்யெழுந்தருளச்செய்து பூசைபண்ணப்போகிறானென்றும்பிரமப்பிரளயபரியந்தமும்பிரமதேவர் பூலோகத்தில் சந்திரபுட்கரணிதீர்த்தத்திற்குவந்து தினமானம் அந்தவிமானத்திற்குத் திருவாராதனஞ்செய்துமுடித்து மறுபடியும் நம்முடைய சத்தியலோகத்திற்குப் போவாரென்றும் நாம் ஞானதிருஷ்டியினாலே முன்னமே அறிந்திருக்கிறோம்.

ஆகையினால் நீர்செய்தஆலோசனைநல்லதாச்சுது மேலும் இந்த பூலோகத்திலுள்ள சகலசீவராசிகளும் பாபத்தினின்றுநீங்கி மோட்சத்தைப்பெறும்படி நீர்தபசுசெய்வதற்கு பிரயத்தினஞ்செய்தபடியால்அந்தத்தபசு நிர்விக்கினமாய் நிறைவேறக்கடவது மேலும் அந்தத்தபோநிலைக்கு தேவர்மிகவும் விகர்தம்பண்ணுவார் அந்தவிகர்தங்களெல்லாம் உம்மைஅணுகாமலிருக்கக்கடவதென்று ஆசீர்வாதம்பண்ணி அட்டாட்சரமந்திரத்தையு முபதேசித்தருளினார் பிறகு இட்சுவாகுமகாராசனும் தனதுஆசாரியராகியவசிட்டமகாமுனிவருக்குநமஸ்காரம்பண்ணிசுவாமிநான் எவ்விடத்திலிருந்து தபசுபண்ணலாமென்றுகேட்க அதற்குவசிட்டரும் அந்தராசனைப்பார்த்துஓ இராசதிலகா நீர்என்னுடைய ஆசிரமசமீபத்தில் தானேயிருந்துதபசுபண்ணலாமென்றுகட்டளையிட்டருளினார் அதுகேட்டு இட்சுவாகுமகாராசனும் தனதுஆசாரியராகிய வசிட்டபகவான்சொற்படியேஅவரதுஆசிரமத்திற்றானே தபசுக்குவேண்டிய சகலஉபகரணங்களையுஞ்சேகரித்துக்கொண்டு பஞ்சேந்திரியங்களையும் நிக்கிரகம்பண்ணிவிட்டுஏகமனதாயிருந்துகொண்டு தபசுபண்ணத்தொடங்கினான் அஃதெப்படியென்றால்.

வெயிற்காலமெல்லாம் பஞ்சாக்கினிமத்தியில்நின்றும் வருஷகாலமெல்லாம் ஈரவஸ்திரத்தைத்தைத்தரித்துக்கொண்டு வெட்டவெளியினின்றும் குளிர்ந்தகாலமாகிய பனிக்காலமெல்லாம் கழுத்தளவுதண்ணீரில்நின்றும் பசிதாகமுதலியசவுக்கியங்களைநீக்கியும் தன் மனைவியானவள் பணிவிடைசெய்யும்படியாகவும் வயிராக்கியசித்தனாயிருந்து அகோரதபசுபண்ணினான் அதையறிந்து தேவேந்திரன்முதலானசகலமானதேவர்களும்ஒன்றாய்கூடி ஓஓ என்னகாரணம்பூலோகத்தில் சூரியவமிசத்திற்பிறந்த இட்சுவாகுமகாராசன் எந்தபதவியை

அடையவேண்டுமென்றுநினைத்து இப்படிப் பட்ட அகோரமானதப சுபண்ணுகிறானோதெரியவில்லை இதையறிந்து நாம் கெடுத்துப்போ டவேண்டுமென்று ஒருமுகமாய்ஆலோசனைபண்ணிபிறகு மன்மதனி டத்திற்குப்போய் மன்மதனைக்கண்டு தேவேந்திரன்முதலான சகல தேவர்களும் வெகுவாய்பிரார்த்தித்தார்கள் அதற்குமன்மதன் சந் தோஷப்பட்டு ஐயாதேவர்களே இப்போது நான் உங்கள்கருத்தின் பிரகாரமே பூலோகத்துக்குப்போய் இட்சுவாகு மகாராசனைக்கண்டு அவன்மனதில்மோகவிகாரமுண்டாகும்படி செய்து அவன்செய்யப் பட்டதவத்தைவிக்கினம்பண்ணிஒருநிமிஷத்தில்வந்துடங்களுக்குதெ ரிவிக்கிறேனென்று உறுதியாகச்சபதம்பண்ணிவிட்டு தென்றலாகிய ரதத்தின்மேல்மகாவுல்லாசத்துடனேறிக்கொண்டு மீனக்கொடியான துபிரகாசிக்கவும் சந்திரனும் வசந்தனும் சகாயமாய்வரவும் அப்சர ஸ்திரீகளெல்லாம் சேனைகளாய்ச் சூழ்ந்துவரவும் குயிற்காளமும்சமு த்திரபேரிகையும்ஒலிக்கவும் தாம்தாமென்றுமகாவைபவத்துடனே இட்சுவாகுமகாராசன் தபசுபண்ணுகிற வசிஷ்டராசிரமத்திற்சமீப த்திற்குவந்துசேர்ந்தான் அப்போது அந்தநந்தவனத்திற்பிரகாசிக் கப்பட்ட முல்லைஅசோகு நீலம் சூதப்பூமுளரி இருவாட்சி சிண்பக ம்புன்னைபாரிசாதமுதலான புஷ்பவகைகளெல்லாம்பகாசுகந்தபரிம ளங்கள்வீசும்படிமலர்ந்ததுகள் அந்தவனத்தில் மன்மதனுடனேவந் தயக்ஷஸ்திரீகளெல்லோரும் மகாகிலேதமாகப்பாடிக்கொண்டும்ப ரதசாஸ்திரமுறைப்படி யாடிக்கொண்டும் விகசிதமானபுட்பங்களைப் பத்திஒருவர்பேரிலொருவரெறிந்து விகடமான பரியாசவார்த்தை களைவசனித்துக்கொண்டிருந்தார்கள் அந்தசமையத்தில் மன்மத னவன்மகாபாகவதசிரேஷ்டனாய் விளங்கப்பட்ட இட்சுவாகுமகா ராசனுக்கெதிரேபோய்நின்று தன்னுடையகையிற்பிடித்திரானின்ற கருப்புவில்லைவளைத்துச் சுரும்பாகியநாணியேறிட்டு மோகனாஸ்திர த்தைத்தொடுத்துகுயில்கள் காளாஞ்சிபிடிக்கவும் வண்டுகள் ரீங்கார ப்பண்ணவும் இவ்வகையானசம்பிரமத்துடனே இட்சுவாகுமகாராச ன்பேரில் பிரயோகம்பண்ணினான் அப்போதுஇட்சுவாகுமகாராசன் தபோநிலையைவிட்டுநீங்காதவனாய் கண்களைவிழித்து இதென்னகார ணமென்றுபார்க்கும்மளவில்மகாசமுத்திரத்தில்அனேகமானமகாம ச்சகள்கூடி ஏககாலத்தில்சண்டைசெய்துகலக்கினாலெப்படியோஅப் படிபோல அந்தபோவனத்தில் மன்மதனும் வசந்தனும்சந்தி ரனும் தென்றலும் குயில்களும்கிளிளும்யக்ஷஸ்திரீகளுமாய்க்கூடி அ ல்லோலகல்லோலங்கள் செய்வதைப்பார்த்து அணுமாத்திரமும் தவநிலைபிச காமல்நிவாததீபம்போற்பிரகாசித்திருந்து அவர்களையெல்லாம் ஸ்ரீ மந்நாராயணமூர்த்தி சொரூபமாகவேகண்டு அவர்களுக்கெல்லாம்ந மஸ்காரம்பண்ணிஅர்க்கியபாத்திய ஆசமனமுதலான சர்வோபசா ரபூசைகளும் ஆனந்தமாகச்செய்தான்

எப்படியென்றால் அதிதிகளாகியபெரியோர்களை எப்படிபாவி த்துபூசைபண்ணுவார்களோ அப்படியே இவர்களைப்பாவித்து பூசைபண்ணினான் அதுகண்டு ன்மதனுடைய சேனைகளெல்லாரும்ப யந்துநடுநடுங்கினவர்களாய் தைரியத்தையும் ஆச்சரியத்தையு மடை ந்து மிகவும்வெட்கத்துடனேநின்று இந்தத்தபோசிரேஷ்டருக்கெதி ரேநின்று நாமேதாகிலும் சேட்டைபண்ணினால் நம்மை அதோகதி யாய்ச்சபித்துவிடுவாரென்று ஆலோசித்துக்கொண்டு சுவரிலெழுதி யசித்ரப்பதுமைகள்போல் அசையாமல்நின்றுவிட்டார்க ளந்தச்சம யமறிந்து வசந்தனும்மெள்ளமெள்ள நழுவிப்போய்விட்டான் சந்திர னும் மறைந்துவிட்டான் ரம்பையுந் திலோர்த்தமையும் தலைசாய்ந் தார்கள் இன்னம் மற்றஸ்திரீகளெல்லாம் நாமிவ்விடத்தி லிருக்கப் போகாதென்றெண்ணி மறைந்து போய்விட்டார்கள் ஊர்வசியும்மற் றுமுண்டான ப்க்ஷஸ்திரீகளும்முகஞ்சோம்பித்தலைசாய்ந்துகொண்டு தங்களுக்குள் தாங்களே விசனப்பட்டு ஓஓ இப்படிப்பட்டமனோதை ரியமும் சாந்தகுணமும் வைராக்கியமும் சிறந்தபக்தியும் புண்ணியசி ந்தனையுமுடைய இராசனென்று தெரியாமல் இவரைச்செயிக்கும்ப டியாய் நினைத்துவந்து மோசம்போனோம் இனிமேலிவ்விடத்திலிருந் தால் நம்மையெல்லாரையும் இந்தராசாவாக்கினையினால் சபித்துப் போடுவார்இவர் எந்தகாரியத்தைக்குறித்து தவம்பண்ணுகிறாரோ அந்தக்காரியமெல்லாம் இவருக்கு வுடனேசித்தியாகுமென்றுசொ ல்லிக்கொண்டு அவர்களெல்லாருமதேவலோகத்திற்குப்போய்ச்சே ர்ந்தார்கள்

அந்தமன்மதனும் மகாபயத்தையடைந்து தன்கையிற் பிடித்தி ராநின்றகரும்புவில்லையும் புட்பபாணங்களையும் கீழே எறிந்துவிட்டு இரண்டுகைகளையுஞ் சிரசின்மேல்வைத்துக்கொண்டு ஓ இட்சுவாகு மகாராசாவே நான் உம்முடைய குணானுபவங்களைத்தெரியாமல் நீர் செய்யும்படியான தவசை விக்கினஞ்செய்வதாகநினைத்துவந்தேன் அ ந்தக்குற்றத்தை நீரேபொறுத்தருளவேண்டும் நீர்இப்படிபஞ்சேந் திரியங்களையும்நிக்கிரகம்பண்ணி திடசித்தனாயிருந்து பகத்தாகிய தபசுபண்ணுகிறபடியால்இந்தத்தவசு ஒருவிக்கினமுமில்லாமல்நிர்விக்கி னமாய்உமக்குச்சித்தியாகவேண்டும் இந்தபூலோகத்தில் மகாரிஷிக ளாயிருக்கப்பட்டவர்களும் அங்கசனாகியவென்னைசெயித்ததில்லைசா ம்பவமூர்த்தியும மகாகோபங்கொண்டு என்னைசெயிக்கிறோமென்று நெற்றிக்கண்ணினால் என்னைச்சாம்பலாயெரித்துப்போட்டுதாமஅப சயத்தையடைந்தார் அந்தக்கோபத்தை நான் தணிக்கச்செய்துசெ யத்தைப்பொருந்தினேன் நானும் வசந்தனுமாய்ப்புறப்பட்டுப்போ ய்பிரமாதிதேவர்களையும் சகலலோகங்களிலுள்ளமனிதர்களையும் த போதனர்களையும் ஒருநிமிஷமாத்திரத்திற் செயித்துவருவோமன ப்

படிப்பட்ட கலைக்கியானங்களுணர்ந்தவர்களாயிருந்தபோதிலும் எங்களைச்செயிக்கமாட்டார்கள் நாங்களிரண்டுபேரும் தேவேந்திரனுக்குயிரண்டு கண்களாகவும் இரண்டு ஆயுதமாகவிருப்போம் நீரோவென்றால்ஸ்ரீரங்கநாராயணமூர்த்திக்குச் சமானமானபுண்ணிய புருஷருமாய் நீர்தாமக்குரோதமுதலான ஆறுபகைகளையுங்கடித்தவரும் துட்டநிக்கிரகசிட்டபரிபாலனஞ் செய்யத்தக்கவரும்ஆகையால்எங்களையெல்லாம்ஏககாலத்தில் ஏகாக்கிரகசித்தமாயிருந்து ஒருக்ஷணமாத்திரத்தில்செயித்துவிட்டீர்இனிமேல் நாங்களிவ்விடத்தி லிருக்கமாட்டோம்நாங்கள்போய்வருகிறோம் உமக்கு அநேகநமஸ்காரஞ்செய்தோம் நீர்யிவ்வளவுவுருதியாயிருந்து செய்யப்பட்ட தவசித்தியாகக்கடவதென்று ஆசீர்வாதம் பண்ணிவிட்டு தெய்வலோகத்துக்குப்போனான்.

கேட்டீரோநாரதரே அப்பால் மன்மதனானவன் தேவலோகத்திற்குப்போய் தேவேந்திரனைக்கண்டு மகாபயங்கரத்துடனேநின்று ஓய்தேவதேவா பூலோகத்தில் தபசுபண்ணின மகாமுனீஸ்வரர்களையெல்லாம்வென்றேன் அந்தபரமபாகவதோத்தமனாகிய இட்சுவாகு மகாராசனுடையதபசைவெல்ல என்னால்முடியாது ஹரீஹரீயென்று சொல்லிவிட்டுத்தன்னுடையஸ்தானத்திற்குப் போய்விட்டான்அந்த வார்த்தையைத்தேவேந்திரன்கேட்டு மகாகோபங்கொண்டு ஐராவதத்தின்பேரில்யேறிக்கொண்டு சகலதேவர்களும்புடைசூழும்படி பூலோகத்தில் வசிட்டமுனிவராசிரமத்திற்குப்போய் அந்தஆசிரமத்தின்சமீபத்தில்தபசுபண்ணுகிற இட்சுவாகுமகாராசனுக்கெதிராகநின்றான் அதுகண்டுஇட்சுவாகுமகாராசனும் தன்னிலையைவிட்டெழுந்திருந்துவந்து மகாபயபக்திவிசுவாசத்துடனே தேவராசனையும் தேவர்களையுங்கண்டு தெண்டனிட்டு சுவாமிகளே நான்செய்ததபோபலத்தினால்உங்களையெல்லாங்கண்டு தரிசனஞ்செய்து கிருதார்த்தனானேனென்று பலவாறுகஸ்தவுத்தியம்பண்ணி அந்தத்தேவராசனுக்குஅர்க்கியபாத்திய ஆசமனமுதலானசர்வோபசாரத்துடன் பூசைபண்ணினான்.

தேவேந்திரனும் அப்படிச் செய்யப்பட்ட பூசையை அங்கீகரித்துககொள்ளாமல் மகா உக்கிரபராக்கிரமத்துடனே தன்கையிலிருக்கப்பட்ட வச்சிராயுதத்தை யெடுத்துவீசினான் அந்தவச்சிராயுதத்தை வீசின ஓசையானது அனேகமாயிரம் இடிகள்நெருப்பிடிகள் யிடித்தாற்போலாகி அதனால் அண்டகடாகங்களெல்லாம் ஒரு சாமநேரமட்டும் அதிர்ச்சியாய் நடுங்குகின்றது அட்டதிசையிலுள்ளவர்கள் இதென்ன விபரீத காலமோ வென்று பயந்து திடுக்கிட்டார்கள் அப்படியிருக்கஅந்தஇட்சுவாகுமகாராசனுடைய சரீரம் நடுங்கவில்லை அவனுடைய பரிசுத்தமான மனமும் எவ்வளவும் கலங்காமலிருந்தது அப்பொழுது இட்சுவாகுமகாராச

அதுகண்டு ஸ்ரீரங்கநாயகர் பிரமதேவனைப்பார்த்து வாருப்பரமேஷ்டியே நீயேன் இப்படிவிசாரப்படுகிறாய் நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் நாம் உதயகாலபூசை உம்முடைய கைகளினாலே பெற்றுக்கொள்ளுகிறோம் இப்போது நாம் இட்சுவாகுமகாராசன் செய்கிற தவத்துக்குப்பிரியமாய் அயோத்தியாபுரிபட்டணத்துக்குப்போய் அவ்விடத்தில் நாலுயுகமளவுமிருந்து அதற்குமேல் காவேரி தீரத்தமான சந்திரபுஷ்கரணியில் எழுமனுக்களுடைய காலமட்டுமிருப்போம்.

நீசெய்ப்பட்ட மத்தியானபூசைவேளைக்கு இவ்விடத்தில் நாம் தப்பாமல் வந்து உன்னுடைய பூசையையும் அங்கீகரிப்போம் உன்னுடைய பூசைமுடிந்தவிறகு மறுபடியும் பூலோகத்திற்குப் போவோம் இப்படியே அங்குமிங்கும் போக்குவரத்துமாயிருப்போம் இந்தப்பிரகாரம் உன்னுடைய ஆயிசுபரியந்தம் நாடோறும் விசுவாசமாகப் பூசைபண்ணி மோட்சத்தைப்பெறுவாயாக மேலும் ஒருநாள் பூசைபண்ணாமற்போனால் மறுபடியும் சம்புரோட்சணை பண்ணவேண்டும் ஆறுமாதமட்டும் பூசைபண்ணாமற்போனால் மறுபடியும் பிரதிஷ்டைபண்ணவேண்டும் அப்படி நில்லாமல் நாம் உன்னிடத்தில் வந்து திரிகாலபூசையும் ஏற்றுக்கொள்ளுகிறபடியால் உனக்கொருவிக்கினமுமில்லை மற்றத்தேவர்களானவர்களெல்லாம் ஒருநாள் அடைக்கலமாய் வைத்திருக்கப்போகிறதும் பிராயச்சித்தமும் பூர்வத்தில் உனக்குச் சொல்லியிருக்கப்பட்ட சுயம்புவாகிய அவிட்ஸ்தலங்களுக்குச் சேர்ந்தவர்களைக் கண்டு ஆனபடியால் நீ ஒன்றுக்கும் விசனப்படாமல் நமதிந்தவிமானத்தைக்கொண்டுபோய் பூலோகத்தில் இட்சுவாகுமகாராசனை யழைத்துப்பிவிக்கக்கடவாய் அதனால் உனக்கொருதாழ்ச்சியும் வாராதென்று சொல்லியருளினார்.

அந்தவார்த்தையைக்கேட்டமாத்திரத்தில் பிரமதேவன் மகிழ்ச்சியடைந்து ஜெயம்ஜெயமென்று கொண்டாடி தேவேந்திரனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு பிற்பாடு கருடாழ்வாரை அழைப்பித்து உங்கருடையசிரசின்மேலில் அந்த ஸ்ரீரங்கவிமானத்தை யெடுப்பித்துக் கொண்டுதானும் அன்னவாகனத்தின்மேலேறிக்கொண்டு பூலோகத்தில் அயோத்தியாபுரிபட்டணத்தில் இட்சுவாகுமகாராசன் தபசுபண்ணுகிற வசிட்டமுனிவராசிரமத்துக்கருகில் தபோவனத்தில் இருக்கிறமகாராசனுக்கு முன் இந்தவிமானத்தைக்கொண்டுபோய்வைத்தவுடனே இட்சுவாகுமகாராசனே நீர்செய்ததபசுக்குத் திருவுளமகிழ்ந்து பெருமாள் பிரத்தியட்சதரிசனங்கொடுத்து உம்மைரட்சிக்கும்படி இதோ எழுந்தருளியிருக்கிறார் இனிநீர் தபசில்லையவிட்டு எழுந்திருந்து சேவித்துக்கொள்ளுமென்றுசொன்னார்,

அந்தவசனங்களானது இட்சுவாகு மகாராசாவினுடைய செவிகளில் அமுதவருஷம் வருஷித்ததுபோல் உறைத்தமாத்திரத்தில் திடுக்கிட்டு அரி அரியென்றுகண்களைத் திறந்தானதிரேயிருக்கிற விமானத்தையும் சதுர்முகப்பிர்மாவையுங்கண்டு மகாசந்தோஷகரமாய் நிமிலென்றெழுந்துநின்றுதிவ்வியதேஜோமயமாய்ப்பிரகாசிக்கப்பட்டாங்கவிமானத்திற்கும்அவ்விமானத்தின்மேலிருக்கிற சதுர்முகப் பிர்மாவுக்கும் அனேகம்பிரதட்சணநமஸ்காரங்களைசெய்து அர்க்கியபாத்திய ஞ்சமனமுதலியசர்வோபசாரங்களுஞ்செய்து மகாபயபக்தி விநயத்துடனே கைகட்டிவாய்பொத்திக்கொண்டுநின்றான்அப்படிநின்ற மகாராசனைப் பார்த்துஓய்இட்சுவாகுமகாராசாவேநீர்செய்ததபோபலத்தினாலே உமக்கு இந்ததிவ்வியவிமானங்கிடைத்தது இதைநீர்ஸ்வீகரித்துக்காலமுந் தவறும ல்ஞ்சாஸ்திரக்கிரமங்கள்தெரிந்தஇந்துபேர் உருத்திரர்களுடனிருந்து பூசைபண்ணுமென்றுமூன்பெருமாள்தனக்கு உபதேசம்பண்ணியிருந்த மந்திரங்களையுஞ்சங்கற்பவிதியைகளையும்உபதேசம்பண்ணி ஆசிர்வாதஞ்செய்து அந்தராசனிடத்தில் விடைபெற்றுக் கொண்டொருடம்பூவிலேயும் தானுமாய்ப்புறப்பட்டு பிரமதேவன் சத்தியலோகத்திற்குப்போனார்

அப்பால்இட்சுவாகுமகாராசனும்பிரமதேவனுங் கட்டளையிட்டபடி அந்தவிமானத்தைவைத்து மூன்றுகாலமும் வேதபாராயணங்களறிந்த பிராமணர்கூட்டத்துடனிருந்துமகாபயபக்திவயிராக்கியத்துடன்பூசைபண்ணிக்கொண்டுஇருந்தான்கேட்டீரோ நாரதமுனிவரேயென்றுபரமசிவன் திருவுளம்பற்றியருளினார்அதுகேட்டுநாரதரும்மகாசந்தோஷமடைந்தாங்காரங்காவென்றுபஜனைபிரதியானித்துக்கொண்டு சற்றுநேரம் சும்மாயிருந்தார்

ஏழாவது-அத்தியாயம்-முற்றிற்று.

ஸ்ரீ

## எட்டாம் அத்தியாயம்.

### ஆதிகலிவிருத்தம்.

மநவுநிறைக்கடற்புவியில் வசுதேவன்றேவகிபோல் மைந்தனுகத்
திருவாசுரம்புரிந்து பராமப்பெயர்புனைந்துதிடியாரான்
பிரலம்பன்றுஞ்சநேசானைக் கொன்றுவகைவாழ்வித்துப்பிரமனுதி
சுரர்முனிவர்தொழுதேத்த வரங்கத்திற்களைவளர்சேதனைப்போற்றி

அப்பால்நாரதமுனிவரெழுந்திருந்து ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவனுக்கு நமஸ்காரம்பண்ணி சுவாமி திரிபுராந்தகா தினாட்சகாதே

வரீர்சொல்லுகின்றசரித்திரத்தைக்கேட்கக்கேட்கஇன்னுங்கேட்கவே ண்டுமென்று ஆசைகொள்கிறதேயல்லாமல் இச்சமட்டுமே கேட்டது போதுமென்றுதோற்றவில்லைஆதலால்அதற்குமேல்இட்சுவாகு மகா ராசன்அந்தவிமானத்தைவைத்துப்பூசைபண்ணிமோட்சமடைந்தசரி த்திரத்தையும் சவிஸ்தாரஞ்செய்ய பரமசிவன் திருவுளம்பற்றியரு ளுகின்றீர்.

கேளுமையாநாரதமுனிவரேஇட்சுவாகுமகாராசனானவன் மகா னந்த பரவசனாகிஅயோத்தியாபுரிபட்டணத்திற்கு உத்தரபாரிசத்தில் ஒருநாழிகைவழிக்கப்பால் சரையுநதிக்கும விரசாநதிக்கும மத்தியில கோயிலுண்டாக்கி அந்தகோயிலுக்குக் கோபுரங்கள் பிரகாரங்கள் மண்டபங்கள்மதில்கள்திருக்குளங்கள்நந்தவனங்கள்முதலானதுகளு ம்சிற்பசாஸ்திரக்கிரமப்பிரகாரம தேவதச்சனால் நியமிக்கப்பட்டுஅந்த ச்சுற்றிலுமெழுபிரகாரங்களுண்டாக்கிஅந்தப்பிரகாரங்கள்தோறும வசி ஷ்டர்வாமதேவகௌசிகர்காசிபர்முதலானமகாருஷீஸ்வரர்களுக்கு யோக்கி யமானஆசிரமங்கள்உண்டுபண்ணிட்டு நன்னாள் குறிக்கப்பட்டதாகிய சுபதினத்தில்அந்ததிவ்வியவிமானத்தை மகாசம்பிரமத்துடனே எடுத் துக்கொண்டுபோய்ச்சந்நிதியிலெழுந்தருளச்செய்து பாஞ்சராத்திரக் கிரமத்தின்படிவசிஷ்டர்முதலான சகலரிஷிகளுடனிருந்துபூசைபண் ணிஅதற்குச் சம்பிரோட்சணம் பண்ணும்படி திருவிழாக்கொண்டும காலைமாலைஉல்லாசமாய் அந்தப்பட்டணத்திலுள்ள நிவாசிகள் மு றும்பெருமாள் சேவைபண்ணிபரமபதத்தையடைவதற்கு ஏதுவா ய்த்தருமோபகாரஞ்செய்துஅன்றுமுதல்கடைசிநாள்மட்டும் மகாவைப வஅலங்காரத்துடன்தினந்தினம்வீதிகள்தோறும்பெருமாளையெழுந்தரு ளப்பண்ணிசகலரும்சேவை சாதிக்கும்படிசெய்வித்து அந்தவருஷத்தில் பங்குனிமாசம் உத்திரட்டாதிநட்சத்திரத்தில் திவ்வியமங்கள ஸ்நானம் பண்ணுவித்தான்

அப்பால்நாள்தோறும்கிரமந்தப்பாமல் திரிகாலமும் பூசைநடப் பித்துக்கொண்டு பெருங்காலம் மனுநீதிவழுவாமல்ராச்சியபரிபாலனஞ் செய்து பிறகு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய பரிபூரணகடாட்சம பெற்றுவைகுந்தத்தின் நித்யசூரிகளாகியபரமபாகவதருடன் சே ர்ந்திருந்தார் அதற்குமேல் அந்தவமிசத்திற்பிறந்தராசாக்களெல்லாரு ம்வைகுண்ட சிகாமணியாயிருந்து பாஞ்சராத்திரக் கிரமந்தப்பாமல் நித்தியந்திரிகாலமும பூசைபண்ணிக்கொண்டுவந்தார்கள் அப்படி நா ளாய்க்கழிந்து பிறகுஅந்தச்சூரியவமிசத்தில்தசரதச்சக்கிரவர்த்தியா னவர்பிறந்துமகாசிறப்போடுமனுநீதிதப்பாமல் அறுபதினாயிரம்வரு ஷமட்டும் மனுநீதிதவறாமல்இராச்சியபரிபாலனஞ்செய்து வருங்கால த்தில்அந்ததசரதசக்கிரவர்த்திக்குவெகுநாள்பிள்ளை யில்லாமலிருந்த து அதனால் அந்தராசன்மனோவியாகுலமடைந்து அசுவமேதயாகம்ப

பெறும்படி அயோத்தியாபுரிபட்டணத்தில் இந்தவிமானத்துடனெழுந்தருளுவோம் அப்பால் சிறிதுகாலைக்குப்பின்பு காவேரிமத்தியில் சந்திரபுட்கரணிதீர்த்தத்தில் அனந்தபீடத்திலிருந்து விபீஷணாழ்வாராலும் பூசிக்கப்பெற்று பிறகு சோழராசனும் பூலோகத்திலுள்ள மற்றுமுண்டான நம்முடைய பக்தசனங்களாலும் பூசிக்கப்படுவோம் பிற்பாடு கலியுகத்திலும் நம்முடைய மகத்துவத்தெரிந்து நம்மை பூசைபண்ணுகிற பக்தசனங்களையுமிரட்சித்து மோட்சத்தைக் கொடுத்தருளுவோமென்று திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார் ஆகையால் நீங்களெல்லாரும் காவேரிதீர்த்தக்கரையைவிட்டு நீங்கள் மவுனதவசுபண்ணிக்கொண்டிருங்களென்று சொன்னார் ஆகையால் நாங்களெல்லாரும் அந்தவிமானத்தை தரிசிக்கும்படி அந்தப்பட்டணத்திலே நாங்கள் இராப்பகலுமதைத் தரிசித்தவண்ணமாயிருக்கிறோம் ஒப்பில்லாசோழராசாவே யிப்போது அந்தத்திருவாக்குப்பிரகாரமே அயோத்தியாபுரியில் தசரதராசனுக்கு பெருமாள் திருவவதாரம்பண்ணியிருக்கிறார் இனிமேல் இராவணசம்மாரம்பண்ணி விபீஷணாழ்வாருக்கு பட்டங்கட்டிவைத்து பிற்பாடு அயோத்தியாபுரிக்கு சீதாலட்சுமணர்பரதர்சத்துருக்கர் ஆஞ்சநேயசமேதராய்ப்புட்பவிமானத்தின்பேரிலெழுந்தருளிவந்து பட்டாபிஷேகஞ்செய்துக்கொண்டு அசுவமேதயாகம்பண்ணுகிற காலத்தில் அந்தவிமானத்தை பூசைபண்ணும்படி விபீஷணாழ்வாரிடத்தில் கொடுத்தனுப்பப்போகிறார் நாங்கள் பொய்வார்த்தைவசனிக்கமாட்டோம்.

அந்தவிபீஷணாழ்வார்விமானத்தை யிவ்விடத்திற்கொண்டுவந்தவுடன் உமக்குச்செதிதெரிவிக்கிறோம் நீர்வார்த்தையைச்சத்தியமாக நினைத்துமனோற்சாகசரியமாய் உம்முடையநிட்களாபுரியென்னும் பட்டணமேபோய்ச்சேர்ந்து சுகமாய் ராச்சியபரிபாலனைப்பண்ணிக்கொண்டிருமென்று அந்தமுனிசுவரர்களெல்லாம் ஒருமுகமாய்ச்சொன்னார்கள் அந்தவார்த்தையைக்கேட்டு தர்மப்பிரமாவாகியசோழராசனும் மனமகிழ்ச்சியடைந்து அந்தமுனிசுவரர்களுக்கு மகாபக்தியினம்பிக்கையுடன் நமஸ்காரஞ்செய்து அவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன்னுடைய நிட்களாபுரிப்பட்டணமேபோய்ச்சேர்ந்து ராசநீதிவழுவாமல் அரசாட்சிசெய்துக்கொண்டிருந்தான் அப்பால்சிறிதுகாலைக்குப்பிறகு ஸ்ரீராமமூர்த்தியானவர் இராவணசம்மாரஞ்செய்து அயோத்தியாபுரிக்குவந்துபட்டாபிஷேகஞ்சூட்டிக்கொண்டு அசுவமேதயாகம்பண்ணும்படி பிரயத்தனஞ்செய்து சகலமானராசாக்களுக்கும் திருமுகங்கட்டளையிட்டருளினார் அப்போது ஐம்பத்தாறுதேசத்துராசாக்களும் வந்துசேர்ந்தார்

நிட்களாபுரியையாளப்பட்டதர்மப்பிரமாவாகிய சோழராசனும் வந்திருந்தான் இவர்களையெல்லாம் அருகேவைத்துக்கொண்டு ஸ்ரீராமமூர்த்தியும் அசுவமேதயாகஞ்செய்துமுடித்துசகலராசாக்களுக்கும் வெகுமதிபண்ணி அவரவர்கள் பட்டணத்திற்குப் போகும்படி விடை

கொடுத்தனுப்புகிறதற்கு முன்னமே தர்மப்பிரமாவாகிய சோழராசனு னவன் ஸ்ரீராமமூர்த்திக்கு நமஸ்காரம்பண்ணி சுவாமி யெனக்கும்பட் டணத்தில் சிறிதுகாரியமிருக்கிறது அதனாலேதான் இசைவாய்ப்போ கவேண்டுமென்று விடைபெற்றுக்கொண்டு விபீஷணாழ்வாருடனும் சிநேகமாகப்பேசி அவரிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு தன்னு டைய பட்டணத்திற்குவந்து இனிமேல் அயோத்தியாபுரியி லெழுந்த ருளியிருக்கும் திவ்வியமானக் காவேரிமத்தியில் வந்துசேருவதற்குச் சந்தேகமில்லையென்று தனக்குத்தானே நிச்சயித்துக்கொண்டு சிற்ப சாஸ்திரவிதிப்படி பஞ்சாராத்திரக்கிரமந்தவறாமல் காவேரிக்கரையில் கோயில் கோபுரங்கள் மண்டபங்கள் சத்திரங்கள் ரிஷியாசிரமங்கள் முதலானதுகளும உண்டாக்கிவைத்து பூசைக்குவேண்டிய பூசாதிரவி யங்களும் சேகரித்து வைத்துக்கொண்டு அனேக பிராமண கூட்டத் துடன் மனமகிட்சியாயிருந்து விமானம் எப்போதுவருமென்ற அபே ட்சையுடன் வழிபார்த்துக்கொண்டிருந்தான்.

அப்படியிருக்க வசந்தகாலமானவுடன் சூரியன் மீனத்தில் பிர வேசமான பங்குனி மாசம் ரோகணிநட்சத்திரம சப்தமி தசமிவாரங் கூடினசுபதினத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர் தங்கள் குலதெய்வமா யிருக்கப்பட்ட விமானத்தைப் பூசைபண்ணி அந்தப்பூசைக்கு வேண் டிய உபசாரணங்களுடன் விபீஷணரிடத்தில்கொடுத்த அந்தவிமான மகத்துவத்தையும சவிஸ்தாரமாகச்சொல்லி அப்பாவிபீஷணா நீ அந்த விமானத்தை யெடுத்துக்கொண்டுபோய் பத்திரமாகவைத்துப் பூசை பண்ணி உன்னுடைய இலங்காபுரி பட்டணத்திலிருந்து சுகமாய் ராச்சி யபரிபாலனமபண்ணிக்கொண்டு சிரஞ்சீவியாக வாழக்கடவாயென்று ஆசீர்வதித் தருளினர் அதுகேட்டு விபீஷணரும் பாக்கியமென்று ஸ்ரீராமமூர்த்திக்கு நமஸ்காரஞ்செய்து அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு விமானததை யெடுத்து சிரசின்மேல் வைத்துக்கொண்டு ஹரிநமோநமோவென்கிற சப்தத்துடன் தன்னுடைய நாலுமந்திரிகளு டனேயும் சோழதேசத்திற்கு வந்து சேர்ந்து மத்தியானவேளையில் கா வேரிமத்தியில் சந்திரபுட்கரணிதீர்த்ததில் அனந்தபீடத்தில் விமானத் தைக்கொண்டு வந்துவைத்தார் அதன்பிறகு விபீஷணரும் சந்திரபுட் கரணியில் ஸ்நானம்பண்ணி உச்சிகாலசெபதபவநுஷ்டான கர்மங்களை முடிததுக்கொண்டு விமானத்தினிடத்திற்குவந்து உச்சிகாலபூசைசெ ய்யுமபடி தொடங்கினர் அதுதெரிந்து அவ்விடததில் காத்துக்கொண் டிருந்த முனீஸ்வரர்களும் சோழராசனும வந்து மகாபக்திவிநயத்துட

ஷேவிபீஷணருக்கு நமஸ்காரம் பண்ணிபிற்பாடு ஸ்ரீரங்கவிமானத்தைக்கண்டு அம்வகமாயிரமாய ஸ்தவுததிரங்கள் பண்ணி அர்க்கியபாத்திய ஆசமனமுதலான சகலவுபசாரங்களுஞ் செய்துமுடித்து ஆனந்தபரவசராகிய விபீஷணரைப்பார்த்து ஒய்லங்காதிபதியாகிய விபீஷணாழ்வாரே உம்முடைய கிருபாகடாட்சத்தினுல் நாங்களெல்லோருமி இந்த திவ்வியவிமானத்தைச் சேவைசெய்து பூசைபண்ணி கிருதார்த்தர்களாயினேம் எங்கள் பிதுர்க்களும் நரகதனைதவிட்டு மோட்சத்தைமடைந்தார்கள் இந்தத்தர்மப்பிரமாவாகிய சோழராசனும் இந்ததேசத்திலுள்ளராசாக்களும் உம்முடைய தர்மத்தினுல் கிருதகிருத்தியராயினுர்களென்று அந்தமுநீஸ்வரர்களெல்லாம் விபீஷணரைப் பலவருகப் புகழ்ந்துகொண்டாடினுர்கள் கேட்டீரோநாரதரேயென்று பரமசிவன் திருவுளம்பற்றியருளினுர் அதுகேட்டு நாரதரும் சந்தோஷகரமாய் ஆச்சரியப்பட்டு மவுனமாய் ரங்காரங்கா வென்று தியானம்பண்ணிக்கொண்டிருந்தார்.

எட்டாவது-அத்தியாயம்-முற்றிற்று.





ஸ்ரீ

## ஒன்பதாம் அத்தியாயம்.



### துதிகவி-விருத்தம்.

ஆவணிரோகிணிநாளமரபட்சத் தஷ்டமியிலரிவைவேற்கட்
டேவதிபாற்றோன்றிநந்தன் மனைவளர்ந்துமாதுலனுந்திபுகஞ்சப்
பாவியுயிரறவிட்டுப் பார்த்தன்விடுமொருதனித்தேர்ப்பாகனுக
காவிரிசூழரங்கத்திற்கண்வளரு மணிவண்ணுகண்ணுபோற்றி.

பிற்பாடு நாரதமுநீஸ்வரர் எழுந்திருந்து ஸ்ரீகைலாசவாசியாகிய சாம்பசிவமூர்த்திக்குத் தண்டனிட்டுஓயசுவாமி அப்பால் விபீஷணுழ்வார் அந்தஸ்தானத்தைத்த காவேரிக்கரையில்வந்து எதுவரையில்பூசை பண்ணினுர் அவர் யிலங்காபுரிபட்டணத்திற்கு எப்போது போய சேர்ந்தார் அந்த வர்த்தமானங்களையும் விபரமாகசசொல்லி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன் திருவுளம்பற்றி யருளுகின்றுர் கேளுமையா நாரதமுனிவரே அதற்குமேல் விபீஷணர் சததரிஷிகளுடனேவந்து சந்திரபுட்கரணி தீர்த்ததில்ஸ்நாயைபண்ணிதேவதர்ப்பணம் பிதுர்தர்ப்பணங்கொண்டு காவேரியிற்போய்க் கணுக்கால் ஜலத்திதில்ருமஞ்சனங்கொண்டுவந்துவைத்து நந்தவனத்திறகுப்போய்செங்கழுநீர்கருசெய்தல் வெண்தாமரை புன்னை திருத்துழாய் சண்ப

கம் அசோகு பாதிரி முல்லைமல்லிகை இருவாட்சி யென்றுசொல்லப்பட்ட நானுவிதபரிமள புஷ்பங்களைப்பறித்துக்கொண்டு சாஸ்திரயுத்தமாக. இயமநியம முதலான அட்டாங்கயோகக் கிரமப்படி ஸ்ரீரங்கநாயகரைப்பூசைப்பண்ணி தூபதீபநைவேந்திய முதலான சோடசவுபசாரங்களும் செய்யத்தொடங்கினசமயத்தில்,

தர்மப்பிரமாவாகிய சோழராசனுடைய கைங்கிரியமாய்வரப்பட்ட நைவேந்தியங்களையும் ஸ்ரீரங்கநாயகரைப் பூசைபண்ணுவித்து சர்வோபசாரங்களுஞ்செய்து வேதசாஸ்திர புராணங்களில் ஸ்தோத்திர பாராயணம்பண்ணிப் பிரதட்சண நமஸ்காரஞ்செய்து முடித்து அவ்விடத்தில் வந்திருக்கப்பட்ட தர்மப்பிரமாவாகிய சோழராசன்முதலான சகலராசாக்களையும் சகலமுநீஸ்வரர்களையும் ஸ்ரீரங்கதர்மருடைய சேவைபண்ணும்படி செய்வித்து விபீஷணர் மங்கள ஆலாத்தியெடுத்தார் அந்தவேளையில் தர்மப்பிரமாவாகிய சோழராசன் விபீஷணரைப்பார்த்து ஐயா விபீஷணாழ்வாரே தேவரீருக்கு நமஸ்காரம் நமஸ்காரமென்றுசொல்லி இரண்டுகைகளையும் சிரசின்மேல் அஞ்சலியாகவைத்து கும்பிட்டு நின்றுசுவாமி தேவரீரே பரமபாகவதோத்தமர் நீரேபுண்ணிய புருஷர் உம்முடைய கடாட்சத்தினால் நாங்களெல்லாம் கிருதார்த்தர்களாயினோம் தேவரீர் இவ்விடத்தில்தானே சிறிதுகாலமிருந்து எங்களை இரட்சிக்கவேண்டுமென்று வெகுவாய்ப் பிரார்த்தித்தோம்.

அதுகேட்டு விபீஷணர் தர்மப்பிரமாவைப்பார்த்து ஓ சோழராசாவே நாம் உம்முடைய எண்ணத்தின்படியே நடப்பிக்கிறோம் ஆயினும் நாளையமுதல் ஸ்ரீரங்கநாயகருக்குப் பிரமோர்ச்சவம் நடப்பிக்கவேண்டும் அந்தமகோற்சவமானது இட்சுவாகு மகாராசாவினுடைய காலமுதல் இதுவரையினும் தப்பாமல் விபரமாய்நடந்தேறிவருகின்றது ஆகலால் அந்தஉற்சவத்தைச்செய்யாமல் நிறுத்தப்போகாது ஆனபடியினாலதைக் கிர்மமாய் நடத்திவிட்டு நாம்சீக்கிரத்தில் இலங்காபுரிபட்டணத்திற்குப்போய் வரவேண்டுமென்றுசொன்னார் அந்தவார்த்தைக்கேட்டு சோழராசனும் மகாசந்தோஷமாய் விபீஷணரைப்பார்த்துசுவாமி தேவரீர் கருத்தின்படியே ஸ்ரீரங்கநாயகருடைய பிரமோற்சவத்தைநடப்பித்து எங்களையெல்லாம் கிருதார்த்தங்களாய்ச் செய்யுமையாவென்றுசொன்னார் அதற்குவிபீஷணரும் அப்படியேயல்லவென்று சம்மதித்துக்கொண்டார் அதற்குமேல் தர்மப்பிரமாவாகிய சோழராசன் பிரமதேவனிடத்தில் சிஷர்களாயிருந்து பஞ்சராத்திரசாஸ்திரங்களைக்கிரமமாகக் கற்றறிருந்தவர்கள் அஞ்சுபேரையழைத்து அவர்கள் அனுமதிப்படி காப்புகட்டிக் கல்துசாத்துப்பண்ணுவித்து பிற்பாடு துஜாரோகணஞ் செய்துதினம் மண்டபத்தில் சேவைசாதிக்கும்படி ஸ்ரீரங்க நாயகரை எழுந்தருளப்பண்ணி அவ்விடத்தில அர்க்கியபாத்திய ஆசனமுதலான சர்வோபசாரங்களும் நடப்பித்து பொங்கல்

சருக்கரைப்பொங்கல் அக்காரவடிசில் தத்தியோதனம் புளியோரை எள்ளோரை மிளகோரை கடுகோரைமுதலிய முப்பத்திரண்டுவகைப் பொங்கலாம்,

தோசைவடை அப்பளாம் எள்ளுண்டை அதிரசம்மனோகரம்சுசியம் தேன்குழல் கோதுமைரொட்டி அப்பம்முதலான கச்சாயவர்க்கங்களும் பலாப்பழம் மாம்பழம் வாழைப்பழம் செவ்வாழைப்பழம் கொய்யாப்பழம் முதலானபழவகைகளும் தேங்காய்செவ்வளநீர் கரும்புமுதலானதுகளும் நைவேத்தியம் பண்ணிவைத்து துய்யநெய்புத்துருக்கு நெய்கற்கண்டு சீனிசருக்கரை முதலானவைகளுஞ்சொரிந்து கமகமவென்று பரிமளிக்கும்படி" திருப்பாவாடையுஞ்சுருளமுதுஞ் செய்து இன்னம்இப்படி பலவிதமான நைவேத்தியங்களும் அமிசை பண்ணிவைத்து அப்பால்சாத்துப்படி அலங்காரம்பண்ணி வச்சிராங்கி ரத்தினாங்கிதரிப்பித்து நவரத்தின கிரீடஞ்சூட்டி முத்தாபரணம் ரத்தினாபரணம் மாணிக்கப்பதக்கம் முத்துமாலை ரத்தினமாலை பவளமாலைகளும் அலங்காரஞ்செய்து பஞ்சாயுதங்களுடனே ஆயுதவரியுதவரிசைகளும் தரித்து இந்திரவர்ணப்பட்டு அதிககாந்தியான சுக்கிரகாந்தியுறுமாலை பீதாம்பரமுதலான திவ்வியவஸ்திர அலங்காரஞ் செய்துவித்தார்.

அப்பால் மெத்தைதலணை திக்குப்பல்லாக்குமுதலான சகலஉபசாரங்களும் தப்பால் நடக்கும்படியுண்டுபண்ணி குடமணிகள் திருவிளக்குகள் தூபகலசங்கள் தீபலாத்திகள் தங்கப்படிகள் தங்கக்குடங்கள் தங்கக்கிண்ணங்கள் முதலானதட்டுமுட்டுகளும் வைப்பித்துஅன்னவாகனம் சிம்பவாகனம் கருடவாகனம் நாகவாகனம் குதிரைவாகனம் ஆனைவாகனம் அநுமந்தவாகனம் இந்திரவிமானம் திருத்தேர் முதலானதுகளும் உண்டுபண்ணி தீவட்டிகள் பகல்வத்திகள் சித்திரபிரதமைகள் சூத்திரபிரதமைகள் விசித்திரங்களாய்ச் செய்வித்துத் தினந்தோறும் ஸ்ரீரங்கநாயகரை உச்சவக்கிரமப்பிரகாரம் அந்தந்தவாகனங்களில்எழுந்தருளப்பண்ணி தேவதந்துபிநாகசுரம்வீணைபுள்ளாங்குழல் குடமுழாபேரிகை திருச்சின்னம் முதலான சகலமேளவாத்தியங்களுந் திசைகளெல்லாம் அதிரும்படி தாம்தாமென்று முழங்கத்தக்கதாக அரம்பை ஊர்வசி திலோத்தமை மேனகையென்றுசொல்லப்பட்டதேவஸ்திரீகளுக்குச் சமானமானஸ்திரீசனங்கள் நாட்டியம் பண்ணிக்கொண்டுவர தேவரிஷிகளும் பிரமரிஷிகளும் இன்னம் அனேகமான தாசகூட்டங்களும் புடைசூழ்ந்து வேதபாராயணங்கள் செய்துக்கொண்டுவர மகாவைபவத்துடன் அநேகப்பிராமணர்களுக்கும் அதிதிகளுக்கும் அன்னதானம் பூதானம் கோதானம் வஸ்திரதானம் சொர்னதானமுதலான சகல தானதருமங்களும் நடப்பித்துபிர்மக்ஷத்திரிய வைசியசூத்திரர்களென்று நாலுவகைச்சாதிகளுக்கும் பெருமாளுக்கு வினியோகமான பிரசாதங்களை அபரிமிதமாகக்கொடுத்தது.

அப்பால் சந்திரபுட்கரணிதீர்த்தக்கரையில் புன்னைவிருட்சத்தடியில் தர்மப்பிர்மாவாகிய சோழராசன்மனமகிழ்ச்சியாய்க்கட்டுவித்தமண்டபத்தில் ஒன்பதுநாளும் இவ்வகைப்பட்ட சம்பிரமத்துடன்பெருமாளையெழுந்தருளச்செய்து பக்தசனங்களுக்கெல்லாம் சேவைசாதிக்கும்படிசேவித்து அப்பால் பத்தாம்நாளாகிய பவர்ணமிதிதியில்ஸ்ரீரங்கநாயருக்கு மங்களஸ்நானம்பண்ணுவித்தார் அந்தச்சமயத்தில் ஸ்ரீரங்கநாயகருக்கு "அவ்விடத்தில் உச்சவமுடிந்தபின்னும் பதினைந்துநாள்மட்டும் மகாசந்தோஷமாயிருந்து பிற்பாடு சோழராசனிடத்திலும் முனீஸ்வரர்களிடத்திலும் வேதப்பிராமணர்களிடத்திலும் இலங்கைக்கரை போகவேண்டுமென்று விபீஷணரும் செலவு பெற்றுக்கொண்டு ஸ்ரீரங்கர் விமானத்துக்குப் பிரதட்சண நமஸ்காரம்பண்ணி தன்னுடைய கைகளால் விமானத்தையெடுத்தார் எடுக்கக்கூடாமற்போச்சுது அதுகண்டு விபீஷணர் நடுநடுங்கி மகாதுக்காகிரந்தராய் வெகுகிலேசத்துடனே ஸ்ரீரங்கநாயகருடைய "உபயபாதாரவிந்தங்களையும் தன்னுடைய கண்களிலொத்திக்கொண்டு விசனப்பட்டமுகமாத்திரத்தில் அந்தக்கண்ணீரானது பகவானுடைய திருவடிக்கமலங்களில் விழுந்தது அதுதெரிந்து ஸ்ரீரங்கநாயகர் விபீஷணரைப்பார்த்து வாரும் பிள்ளாய்விபீஷணா எழுந்திரு நீ ஒன்றுக்கும் பயப்படாதே உன் விசனத்தை விட்டுவிடு காவேரிதீர்த்தமும் சந்திரபுட்கரணியும் கூடியிருக்கிறபடியால் இதுமகா புண்ணியஸ்தலம் அல்லாமலும் சோழராசன் மகாபுண்ணியபுருஷன் மேலும் இந்தமுனிஸ்வரர்களும் வேதப்பிராமர்களும் மற்றுமுண்டான தாசகூட்டங்களும் மகாஉத்தமபுருஷர்கள் ஆகையால் இவர்களையும் இந்தஸ்தானத்தையும் விட்டுவர நமக்கு சம்மதமில்லை ஆனபடியினால் நீ நம்முடைய சொல்லுக்குமறுவுத்தரஞ்சொல்லாமல் மகாசந்தோஷமாய் பிரயாணப்பட்டு உன்னுடையபட்டணமாகிய இலங்காபுரிக்குப் போய்ச்சேர்ந்து பரமபாகவதனாய் மனுமுறைவழுவாமல் இராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிரு இதுவுமல்லாமல் இந்தக்காவேரிக்கு ஒருவரங்கொடுத்திருக்கிறோம்.

அதுஏதென்னவென்றால் பூர்வம் ஒருகாலத்தில் இங்ககதிகளெல்லாம்ஒன்றாகக்கூடி விந்தியவர்வத்தில் வாசம்பண்ணிக்கொண்டு பந்தகளடித்தும் அம்மானையாடியும் தும்பிபறந்தும் புட்பங்கள்பரித்தும் ஒருவர்க்கொருவர் புண்ணியகதைகளைச் சொல்லிக்கொண்டும் அதுகள் இஷ்டலாபத்துடனே விநோதவுல்லாசமாய் விளையாடிக்கொண்டிருக்கிறவேளையில் விசுவாசமென்கிற ஒருகந்தருவன் அந்தரமார்க்கமாய் உத்திரதிசையிலிருந்து தட்சணதிசையை நோக்கி அனந்தபத்மநாபசுவாமியைச் சேவிக்கும்படி பிரயத்தனப்பட்டுப் போகும்போதுவழியில் இந்தநதிகள்விளையாடிக் கொண்டிருக்கிறதைப்பார்த்து இரண்டுகைகளையும் உயரவெடுத்து நமஸ்காரம்பண்ணி விட்டுப்போனான் அதுகண்டு இந்தநதிகள் எல்லாம் ஓரிடத்திற்கூடி நாம் இத்தனை பேரிருக்கிறோமே அந்தகந்தருவன் நமக்குள்யாவரைநோக்கி நமஸ்காரம் பண்ணினானென்று ஒருவர்க்கொருவர் கேட்க அப்போது என்னைக்கும்

பிட்டானென்றும் உன்னைக்கும்பிட்டானென்றும் ஒன்றுக்கொன்று போராடிக்கொண்டிருந்ததுகள்.

அந்தகந்தருவனோவென்றால் தட்சணதிசைக்குப்போய்ச் சமுத்திரத்தில் ஸ்நானம்பண்ணி அனந்தசயனத்திற்கு வந்து மகாவைபவத்துடனே திருக்கண்வளர்ந்தருளுகின்ற ஸ்ரீஅனந்தபத்மநாபருடைய நித்திரையை எழுப்பும்படி பூபாளராகத்தினால் ஹரிநாமகீர்த்தனங்கள் பாடி திருக்கண்விழித்தருளினபின்பு அந்தச்சுவாமியைச் சேவித்துக்கொண்டு புரட்டாசிமாதமுதல் உத்தராயணகாலம்வருகிறமட்டும் அந்தஸ்தலத்திலேயேவாசமாயிருந்து பிற்பாடு சுவாமியைச்சேவித்து விடைபெற்றுக்கொண்டு உத்திரதிசையைநோக்கி அந்தமார்க்கமாகப் புறப்பட்டு வருகிறபோது விந்தபர்வதத்தில் இந்தநதிகளெல்லாம் முன்போலக் கூடியிருந்துபோராடி இருப்பதைக்கண்டு அவன்முன்போலவே நமஸ்காரம்பண்ணினான் அப்படிநமஸ்காரம்பண்ணின மாத்திரத்தில் அந்தநதிகளெல்லாம் ஒன்றாகக்கூடி எங்களில் நீயாரைப்பார்த்து நமஸ்காரம்பண்ணினாயென்று கேட்க உங்களுக்குள் எந்தநதியானது மகத்துவமென்னமையும் பொருந்தியிருக்கிறதோ அதைப்பார்த்து நமஸ்காரம்பண்ணினேனென்று சொல்லிப்போய்விட்டான்.

அந்தவசனத்தைக்கேட்டு கங்கையானது நானேசிரேஷ்டமென்று சொல்லியது அந்தச்சொல்லுக்குச்சரிதானென்று சம்மதித்து எல்லாநதிகளும் சும்மாயிருந்ததுகள் அதில்காவேரிமாத்திரம் சம்மதிக்காமல் கோபங்கொண்டு கங்கையைப்பார்த்து நீ சிரேஷ்டமென்பது நான்சிரேஷ்டமென்பதும சத்தியலோகம்போய் பிரமதேவரைக்கேட்டுத் தெரிந்துகொள்வோமென்று கங்காநதியை அழைத்துக்கொண்டு சத்தியலோகத்திற்குப்போய் பிரமதேவரைக்கண்டு நமஸ்காரம்பண்ணி ஓ சத்தியலோகவாசகா சதுர்முகப்பிரமாவே நதிகளுக்குள் நான் சிரேஷ்டமோ இந்தகங்காநதிசிரேஷ்டமோவென்று கேட்டது அதைக்கேட்டு பிரமதேவன் புன்சிரிப்பாகச்சிரித்து கங்கையானது ஸ்ரீவிஷ்ணுபாதத்திற் பிறந்தபடியால் சிரேஷ்டமென்று சொல்லப்படும் இப்படி சொல்லுவதில் உனக்குத்தாழ்ச்சியென்னவென்று பிரமதேவன் ஆதரவாகச்சொன்னான் அந்தவார்த்தையைக்கேட்டமளவில் காவேரிநதியும் லச்சையடைந்து இயோர்பர்வதத்திற்கு வடபாரிசத்தில்வந்துசேர்ந்து பிரமதேவனை நோக்கிமகாவுக்கிரமானதபசுபண்ணிக்கொண்டிருந்தது.

அப்போது அந்தக் காவேரியினுடைய தபசுக்கு மனமிரங்கி பிரமதேவனும் பிரத்தியட்சதரிசனங்கொடுத்து உனக்கென்ன வரம்வேண்டுகேட்டார் காவேரிநதியும்பிரமதேவனுக்குப்பிரதட்சணநமஸ்காரம்பண்ணி சுவாமி நான்கங்காநதியிலும் சிரேஷ்டமாய் விளங்கும்படிக்கட்டளையிடவேண்டுமென்று கேட்டது அதற்குப்பிரமதேவன் காவேரிநதியைப்பார்த்து நீநம்மை மகத்தாகதபசுபண்ணினபடியால் இன்றுமுதல்கங்காநதிக்குச்சமானமாய்உன்னைசகலமானசெனங்களும் புக

ழ்ந்துகொண்டாடக் கடவர்களென்று வரங்கொடுத்துவிட்டு அன்ன வாகனத்தின்மேல் தன்னுடையசத்தியலோகம்போய்ச்சேர்ந்தார் காவேரிநதியானது அந்தவரத்திற்குச்சம்மதிக்காமல் சோழதேசத்தில்வந்துசேர்ந்து சராட்சேத்திரமென்கிற திருச்சேறையிலிருந்து நம்மை விக்கிரகரூபமாகப் பாவனைபண்ணி பூசிக்கத்தக்க தபசுபண்ணிக்கொண்டிருந்தது அந்ததபசுக்கு நாம்சந்தோஷத்தையடைந்து பிரத்தியட்சதரிசனங்கொடுத்து உனக்குவேண்டியவரத்தைக் கேளென்றுசொன்னோம் அதுகேட்டுகாவேரியும் நமக்குநமஸ்காரம்பண்ணி சுவாமி லோகநாயகா நானஇவ்வளவுகாலம் தபசுபண்ணியும உமமுடையபாதத்திற்பிறந்த கங்காநதிக்குச்சமானமேயல்லாமல் சிரேஷ்டமாகாமற் போனேன் ஆதலால்இனியாகிலும எனனைசசாவததிரளும் கங்காநதியைப்பார்க்கிலும காவேரிநதியே சிரேஷ்டமென்று சதாகாலமும்புகழ்ந்து கொண்டாடும்படிசெய்விக்கவேண்டும்.

அதுவுமல்லாமல் கங்காநதியானது என்னைவந்து வணங்கும்படி செய்யவேண்டுமென்றுங்கேட்டது அதற்குநாம் அங்கீகரியாமற் கெங்காநதியானது நம்முடையபாதத்தில்பிறந்தபடியினால அதுவேசிரேஷ்டமென்பது நிச்சயமாயினும நீவெகுகாலமாய நம்மைப்பூசித்துதபசுபண்ணினபடியால் கங்காநதியிலும உன்னைச்சிரேஷ்டமாகச் செய்விக்கிறோம் அதுஎப்படியென்றால் ஒருநாள் நம்முடையபாதத்திற்பிறந்த கங்காநதியைச்சிரேஷ்டமென்று பூலோகத்திலுண்டாகிய சகலமானபேர்களும் கொண்டாடுகிறார்களே அப்படியிருக்க நாம்எப்போதுஉன்னிடத்தில்தானே வாசமாயிருக்கிறபடியால் நீயேசிரேஷ்டமென்று சர்வத்திரசாதாரணமாகச் சொல்லுவதற்குச் சந்தேகமில்லைஉன்னுடைய மகத்துவத்தையொருவராலும் வர்ணிக்கமுடியாது நீசுகமாயிருவென்று வரப்பிரசாதங்கொடுத்திருக்கிறபடியால நாமினி இவ்விடத்தில் தாம்வாசமாயிருக்கப்போகிறோம ஆதலால் நாம்காவேரிநதிக்குக் கொடுத்திருக்கிறவரத்துக்குப் பின்னமவராவொட்டாமல் நீசெய்யவேண்டியதென்று திருவாய்மலர்ந்தருளி ஓய்விபீஷணா நாம்இலங்காபுரிபட்டணத்திற் கெழுந்தருளமாட்டோம நாமிவ்விடத்தில தானேசதாகாலமும வாசமாயிருந்து உன்னுடைய இலங்காபுரிபட்டணத்தைப்பார்த்தபடியே இருப்போமென்றுசொல்ல அதுகேட்டு விபீஷணரும பயபக்திவிநயத்துடனே சுவாமி ஸ்ரீரங்கநாயகர் தேவரீருடைய திருவுளமபபடியிருந்தால் தாசன்எனனசெய்யப்போகிறேன மகாசந்தோஷமாசசுது நானும்தேவரீருடைய பாதாரவிந்தங்களையே இடைவிடாமற் பூசித்துக்கொண்டிருக்கிறேன் நான் இலங்காபுரிக்குப்போகிறதில்லை எனக்குராச்சியபரிபாலனமும் வேண்டியதில்லை உமமுடையபாதாரவிந்தங்களையே சரணாகதியென்று சரணமடைந்தேனென்னைத் தள்ளிவிடாமற் காப்பாற்றி இரட்சித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார அப்படிச்சொன்ன வார்த்தையை ஸ்ரீரங்கநாயகர்கேட்டு புன்சிரிப்பாகச்சிரித்து அப்பாவிபீஷணா நீஸ்ரீராமமூர்த்தியா

ல் பட்டாபிஷேகஞ்செய்வித்த ராச்சியத்தைசுகமாய் பரிபாலனம் பூண்ணிக்கொண்டிரு நாமஇந்தவிமானத்தில விக்கிரகரூபமாயிருந்து சகலமான பக்தஜனங்களும இஷ்டசித்திகளையும மோட்சத்தையும பிரசாதித்துக்கொண்டிருக்கிறோம்.

நாமிவ்விடத்திலிருக்கிறமட்டும் உனக்கும்உன்னுடைய இலங்காபுரிபட்டணத்திறகும ஒருதாழ்ச்சியுமில்லை சூரியசந்திரர்களுளவமட்டும ஒருபயமுமிலலாமல சிரஞ்சீவியாகவாழ்ந்து ராச்சியபரிபாலனம பணணி அதற்குமேல் பிரமகறபாந்தத்தில் பிரமதேவனோடு கூடிப்பிரமபதத்திறகுவந்து நம்மைசசேவித்தது இவ்விடத்திலிருக்கப்பட்டபரமபகதாகளாகிய நித்தியசூரியர்களுடன சிறிதுகாலமிருந்து பிறபாடுபிரமசிருஷ்டியில் திருபபவும உன்னுடைய இலங்காபுரிபட்டணத்திற்குவந்து சுகமாய் அரசாடச்செயயக கடவாயென்று உறுதியாகச்சொலலியருளினா அதுகேட்டு விபீஷணாமறுபடியும பகவானைப்பார்த்து சுவாமிஸதிரீரங்கநாமா ஸ்திரீராமபத்திரசுவாமி கொடுததருளியவிமானமே யெனக்குசசித்தியாகாமற்போனபோது இலங்காபுரிராச்சியமும சகலசம்பத்துகளுமிருந்து எனக்குஎன்னபலனைக் கொடுக்கபபோகிறது எனக்குஅதுகளொன்றும வேண்டியதிலலை, உம்முடையபாதமே கட்டளையிட்டருள வேண்டுமென்று நமஸ்காரம் பண்ணினான.

அதுகேட்டுப்பெருமாளும் விபீஷணரைப்பார்த்து அப்பாவிபிஷணாபூலோகத்திலுள்ள யோகீஸ்வரர்களும் முனீஸ்வரர்களும் இன்னமற்றுமுண்டான பக்தசனங்களும் நம்மைநோக்கி அநேகதானதருமங்கள் எக்கியங்கள்பண்ணி அந்தப் புண்ணியதர்மங்களினால் நம்முடையவாக்குக்கெதிரில்லாமல் உன்னுடைய பட்டணத்தைப் பரிபாலனமபண்ணிககொண்டு முறகூறிய சற்கருமங்களைச் சதாகாலமும நடத்திகொண்டிருந்தால் உனக்கு மோட்சசமபத்தைப் பிரகாசித்தருளுவோம் நீயும்உன்னுடைய பந்துசனங்களும் இவ்விடத்திறகு அடிக்கடி வரவேண்டாம பூலோகததிலுள்ள புண்ணியபாவங்களில விருப்புவெறுப்பிலலாமல நிட்காமியதவமபண்ணி நமமுடைய பாதாரவிநதங்களையே சரணாகதியென்று எவன்சரணமடைகிறானோ அவனே மோட்சவதிகாரி அவனேநமக்குப் பிரியமானவனென்று அநதரங்கமாய்த் திருவுளம்பற்றி யருளினார்.

அதைக்கேட்டமாத்திரத்தில் விபிஷணரும் புளகாங்கிதத்தையுடையவராய் ஸ்திரீரங்கநாயகருக்குப் பிரதட்சணநமஸகாரமபண்ணி ஆயிரந் திருநாமங்களாலும் அர்ச்சனைபண்ணி அந்தப்பகவானிடத்தில விடைபெற்றுக்கொண்டு இலங்காபுரிபட்டணம்போய்ச்சேர்ந்து இரா

ஜநீதிவழுவாமல் ராச்சியபரிபாலனஞ் செய்துக்கொண்டிருந்தார் கேட்டீரோநாரதமுனிவரே அப்பால்தர்மப்பிரமாவாகிய சேமராசன்மனமகிழ்ச்சியடைந்து அநேகமண்டபங்கள் கோபுரங்கள்சத்திரங்கள் ரிஷியாசிரமங்கள் கோயில்கள் மதில்கள் கட்டுவித்து அநேகந்திருக்குளங்கள்வெட்டுவித்து அநேகம்புட்பவனங்கள் உண்டாக்கிவைத்துவேதப்பிராமணர்களால் நித்தியம்ஐந்துகாலபூசையும் பாஞ்சராத்திரக்கிரமந்தவராமல் நடக்கும்படிசெய்வித்துப் பிரமோற்சவமும் நித்தியோற்சவமுந் தப்பாமல் நடந்தேறிவரும்படி செய்வித்தானென்று பரமசிவன் திருவுளம்பற்றியருளினார் இந்தமகத்துவங்களையெல்லாம் நாரதர் கேட்டு ஆச்சரியமாய் ஒன்றுஞ்சொல்லாமல் சற்றுநேரமவுனமாயிருந்தார்.

ஒன்பதாவது-அத்தியாயம்-முற்றிற்று.



ஸ்ரீ

## பத்தாம் அத்தியாயம்.



துதிகவி-விருத்தம்.

கவனவாம்பரியுருவாயவனியிடை யவதரித்துக்கருத்துமன்னர்
பவமகற்றும்படியணியிஞானங்கொண்டு முனிவர்பல்லாண்டுகூறல்
தவமுயலும்வீடணனுக்கிரங்கியொரு விமானமேற்சர்ப்பமீது
தவையகுசிரக்கத்திற்பள்ளிகொள்ளும் ஸ்ரீரங்கநாதாபோற்றி.

பிற்பாடு நாரதபகவானெழுந்திருந்து ஸ்ரீகைலாசபதியாகியபரமசிவனுக்கு வலசாரி இடசாரியாகவந்து பிரதட்சண நமஸ்காரங்கள்பண்ணிஸ்தோத்திரஞ்செய்து சங்கராசர்வஜீவதயாபரா தேவரீருடையகிருபாகடாட்சத்தினால் பூலோகத்திற்கு ஸ்ரீரங்கவிமானம் வந்தவரலாறும் அந்தப்பூசைபண்ணினவர்களும் ஒருதரம்அந்தஸ்தலமகத்துவத்தையுமதிலுண்டான தீர்த்தமகத்துவங்களையும் கிரமமாகத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யதிருவுளம்பற்றியருளுகிறார்.

கேளுமையாநாரதமுனிவரே ஸ்ரீரங்க விமானத்தைச்சூழ்ந்த இரண்டுயோசனை தூரமட்டும் ஸ்ரீரங்கக்ஷேத்திரமென்றே சொல்லப்படும் அதிற்குடியாய் வாசமாயிருந்தபேர்களுக்கு ஒருக்காலுநரகமில்லை ஸ்ரீரங்கத்திற்குப்போகட்டுமென்று வாக்கினாற்சொன்னாலும் மனதினால்நினைத்தாலும் மோட்சத்தைப்பெறுவார்கள் அப்படியிருக்குமானால் ஸ்ரீர

ல்த்திலேயேசதாகாலமும் வாசம்பண்ணுகிறவனுடையபெருமையை ஒருவராலுமளவிடச் சொல்லிமுடியாது.

முதலாவது சந்திரபுட்கரணிதீர்த்தமகத்துவம்.

கேளுமையாநாரதரே அவ்விடத்தில் உபயகாவேரியில்லாமல் நவதீர்த்தங்களுண்டு அதுகளில் முதலாவது சந்திரபுஷ்கரணிதீர்த்தத்தில் எவனாகிலும் ஏகமனதாயிருந்து ஒருதரம் ஸ்நானம்பண்ணி நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு விமானத்தைச்சேவிப்பானாகில் அவனும் அவன்வமிசத்திலுள்ள பிதுர்த்தேவதைகளும் பாபவிமோசனங்களாய் பாபபுண்ணியலோகத்தைப் பெறுவார்கள்.

அஃதெப்படியென்றால் சந்திரனானவன் தர்மகர்பருடையசாபத்தினால் தன்னுடையபதினாறுகலைகளும் நீங்கிப்போயிருந்ததுக்காக்கிரந்தனைப் அந்தஸ்ரீரங்கத்துக்குவந்து சந்திரபுட்கரணிதீர்த்தக்கரையில் ஒருபுன்னைவிருட்சத்தைவைத்துப் பயிராக்கி அந்தனிழலிலிருந்து நெடுநாள்தபசுபண்ணிப்பிறகு ஸ்ரீரங்கநாதருடைய கிருபாகடாட்சத்தினால் பழையபடியே தன்னுடையபூரணகலைகளையடைந்து தன்னுடையஸ்தானத்திற்குப்போய்ச்சேர்ந்தார் அந்தபுன்னை விருட்சத்தைதெரிசித்தவர்களுக்கும்பரிசித்தவர்களுக்கும் மகாலட்சுமிகடாட்சமுண்டாகும் அந்தவிருக்ஷத்தைக்கண்டவுடன் சேவிக்கவேண்டும் அதன்நிழலிலிருந்து தானதருமங்கள்பண்ணவேண்டும் அந்த புன்னைமரத்தடியில் உட்கார்ந்துசெபம்பண்ணினால் ஒன்றுகோடியாகப்பலிக்கும் எப்போதும் அந்ததீர்த்தக்கரையில் வேதவியாசர் வாசமாயிருப்பார்.

அந்ததீர்த்தத்திற்கு ரிஷிவேதவியாசர். அதற்குதேவதைவாசுதேவன்புட்கரன் புட்காராசன் காலநேமிகுமுதன் என்றசொல்லப்பட்ட இவர்கள் நான்குபேரும்காவலாயிருப்பார்கள் இவர்கள்நாலவரும் ஸ்ரீரங்கநாயகருக்குத் தூதுவர்களாம் ஆதலால் சந்திரபுட்கரணி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணவேண்டியவர்கள் அந்ததீர்த்தத்துக் காரணதேவதையாகிய வாசுதேவரைநினைத்துபுட்பங்களைகையிலெடுத்துக்கொண்டு அந்ததீர்த்தத்திற்குப் பிரதட்சணம்நமஸ்காரங்கள்பண்ணி அந்ததியானங்களைச்சொல்லவேண்டும் அந்தத்தியானங்க ளெப்படியென்றால்சகலலோகங்களுக்கும் சகலசீவராசிகளுக்கும் ஆதாரமாகயிருக்கப்பட்டகர்த்தாவே நான் ஸ்நானம்பண்ணும்படி அநுக்கிரகஞ் செய்யவேண்டும் என்னைப்பாசபந்தங்களினின்றுநீக்கிமோட்சத்திற்சேர்க்கவேண்டுமென்றுசொல்லி ஏகமனதாயிருந்து அதில்ஸ்நானம்பண்ணும்போது அவ்

டாட்சமந்திரத்தைச் செபிக்கவேண்டும் அதற்குமேல் கரையேறினவுடனே வாசுதேவமூர்த்திக்கு அர்க்கியங் கொடுக்கவேண்டும் அதற்குமேல் பிரமதேவனுக்கும்சூரியனுக்கும் இட்சுவாகுமகாராசனுக்கும்உமக்கும் தர்ப்பணத்தைப்பண்ணி தனக்குச்சக்தியுண்டானமட்டும்பிருமணர்களுக்கும் அதிதிகளுக்கும் தானதர்மங்கள்பண்ணினால் அவனுக்கும் பரமபதங்கிடைக்குமென்பதற்குச்சந்தேகமில்லை அந்ததீர்த்தக்கரையிலிருந்து ஹரிநாமஸ்மரணைபண்ணினால்அவன்தேவபோகத்தை அநுபவிப்பான் அவன்செய்யும்புண்ணியங்கள் ஒன்றுகோடியாகும்அதலால் அந்ததீர்த்தத்தில் மூழ்கிறவர்கள் விசேஷமாகத் தானதருமங்களைசெய்யவேண்டும்.

## இரண்டாவது வில்வதீர்த்தமகத்துவம்.

[illegible] யில்ஏழுபிரகாரத்துக்குவெளிப்புறத்தில் வில்வதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அதுசுக்கிரபகவான் தபசுபண்ணினஸ்தானம் எப்படியென்றால் மகாபெலிச்சக்கிரவர்த்தியானவன் யாகம்பண்ணினசமயத்தில்ஸ்திரீமந்நாராயண மூர்த்தியானவர் வாமனவதாரமாகப்போய் மூன்றடி மண்கேட்டார் அவருக்குமூன்றடிமண்கொடுக்கும்படிமகாபெலியானவன் வாமனமாகிய பெருமாள்கையில் தாரைவார்க்கும்போது சுக்கிரனும் அந்தக்கமண்டலதுவாரத்திற்புகுந்திருந்து கமண்டலசலம்பெருமாள்கையில் விழவொட்டாமல்செய்வான் அதற்குமேல்தர்ப்பையினால் துவாரத்தைக்குத்திதாரைவார்த்தான் அதனால்சுக்கிரனுக்குக்கண்தெரியாமல் குருடனாகிப்போனான் வாமனமூர்த்திக்குத்தானம்பண்ணுகிறகாலத்தில் குறுக்கே நின்று தடுத்தபடியினால் நமக்குஇந்தகெதியாச்சுதென்று இந்தத்தோஷநிவாரணமாகும்பொருட்டு வில்வத்தீர்த்தக்கரையில் ஒருவில்வமரத்தைவைத்துப் பயிராக்கி அதின்கீழிருந்து வெகுகாலம் சுக்கிரபகவான் தபசுபண்ணினார் அந்ததீர்த்தத்துக்கு ரிஷிசுக்கிரபகவான் மூதுங்கரும் கணாதரும் அதற்குக்காவலாளிகள் ஸ்ரீநிவாசராகிய அச்சுதர் அதற்குத்தேவதை அந்ததீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குச் சகலதோஷபரிகாரமாம் அவ்விடத்தில் கிஞ்சித்தானம்பண்ணினால் விசேஷபலனுண்டாகும்அதைபார்க்கிலும் இரணியதானம்பண்ணினால அதிகபலனுண்டு அல்லாமல் அதில் ஸ்நானப்பண்ணினவன் ஸ்திரீவிஷ்ணுமூர்த்தியையும்பரமபாகவதர்களையும் நிந்தனைசெய்தவனானாலும் அவன்செய்த அபசாரங்களெல்லாம் நிவாரணமாகிக்கிருதார்த்தனாவான் அந்தத்தீர்த்தக்கரையிற்செய்ததானதருமங்கள் ஒன்றுகோடியாய்வளரும் அந்தத்தீர்த்தமகத்துவத்தினால் பிரமஹத்திதோஷமும் நீங்கும்.

## மூன்றாவது சம்புதீர்த்த மகத்துவம்.

கேளுமையா நாரதரே அப்பால்இந்திரதீர்த்தத்திற்குஅக்கினிமூலையில்சம்புதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அந்ததீர்த்தக்கரையில் ஈசானியன் எப்போதும் வாசமாயிருப்பான் அதுயெதினாலென்றால்பிரமதேவனுடைய ஆக்கினையில் உலகத்திலிருக்கப்பட்ட சகலஜீவராசிகளுக்கும் மயக்கமுண்டாக்கும்படி பாஷண்டமதமும் அந்தமதசித்தாந்தக்கருத்தகுந்த பலவிதசாஸ்திரங்களுமுண்டுபண்ணி சகலசனங்களையும்மயக்கச்செய்வித்த தோஷந்தீரவேண்டுமென்றுநினைத்து அந்ததீர்த்தக்கரையில் ஒருகாவல்மரத்தைவைத்துப் பயிராக்கி அந்தமரத்தின்கீழ்வெகுகாலமிருந்து தபசுபண்ணினான் அந்ததீர்த்தத்துக்குரிஷிதுக்கிரகபத்தர் அதற்குக்காவலாளிகள் நாதன் கனகாதன் என்னுமிரண்டுபேர் அதற்குதேவதைஈசானியன் அந்ததீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி பிராமணர்களுக்கு அன்னதானங்கொடுத்தால் அவனுக்குச்சகலபாவங்களும்நீங்கும் அந்ததீர்த்தத்திற்கு அன்னதானமேவிசேஷமாகும் அதனால் ஸ்ரீரங்கநாயகர் சந்தோஷத்தையடைந்து தம்முடையபரமபாகவதர்களுக்குச்செய்த அபசாரங்களையெல்லாம் பொறுத்து இரட்சித்தருளுவார்.

## நான்காவது அசுவதீர்த்த மகத்துவம்.

கேளுமையாநாரதரே அப்பால்சந்திரபுட்கரணிக்குநேர்தெற்காகவும்காவேரிக்குவடக்காகவும் அசுவதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அந்ததீர்த்தத்தினிடத்தில் சொர்க்கலோகாதிபதியாகிய தேவேந்திரன் அகலிகையைப்பிடித்ததோஷம் நிவாரணமாகும்படி ஒரு அரசமரத்தைவைத்து பயிர்செய்து அந்தமரத்தின்கீழிருந்து வெகுகாலந்தபசுபண்ணி அந்ததோஷத்தைப் பரித்துக்கொண்டான் அந்த தீர்த்தத்திற்குரிஷிகௌதமர் அதற்குக்காவலாளி அனந்தர் அதற்குத்தேவதை யிந்திரன் அந்ததீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி கன்னிகாதானம் வஸ்திரதானம்பண்ணினால் சகலதோஷங்களும் பரிகாரமாகும் மேலும் பதிவிரதாசிரோன்மணிகளாயிருக்கப்பட்ட ஸ்திரீகளை இச்சித்ததோஷமும் நீங்கும்படி பெருமாள் கடாட்சிப்பார்.

## ஐந்தாவது புன்னாகதீர்த்த மகத்துவம்.

கேளுமையாநாரதரே அப்பால் சந்திரபுட்கரணிக்கு மேற்குத்திசையிலே காவேரிமத்தியில் புன்னாகவதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அந்ததீர்த்தக்கரையில் அக்கினிதேவனானவன் ஆறுநட்சத்திரங்களைக்கூடியதோஷப்பரிகாரமாகும்படி ஒருபுன்னைவிருட்சத்தைவைத்துப்பயிர்செய்து அந்தமரத்தின்கீழ் வெகுநாள்தபசுபண்ணிக்கொண்டிருந்து அதனால் அந்ததோஷத்தைத்தீர்த்துக்கொண்டான் அந்த தீர்த்தத்துக்கு ரிஷிகபத்திரர் அந்ததீர்த்தஇரட்சகர் வித்தியாதரர் அதற்குதேவ

யதை அக்கினிதேவன் அந்ததீர்த்தத்தில் ஸ்திரீயப்பதியாகிய நாராயண னை நினைத்து ஸ்நானஞ்செய்து பசுவும் பூதானம் பண்ணினால் அவன் செய்திருக்கப்பட்ட பாவங்களெல்லாம்பறந்து போகும் மேலும் பர தாரக்கை இச்சித்தபாவமும் நீரும்படிபெருமாள் கடாட்சித்தருளு வார்.

ஆறுவது-வகுளதீர்த்தமகத்துவம்.

கேளுமையாநாரதரே அப்பால்சந்திரபுட் கரணிக்குவாய்வுமூலையி ல்வகுளதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அங்கேதேவேந்திரனைவன் விருக்கிருசூரனைக்கொன்றபழிநீங்கும்படி அந்ததீர்த்திக்கரையிலொரு வகுளமரத்தைவைத்துப் பயிராக்கி அந்தமரத்தின் கீழிருந்து சிறிது நாள் தபசுபண்ணி அந்தபாவத்தைபோக்கிக்கொண்டான அந்த தீர்த் தத்துக்கு ரிஷிபிரசாபதி அந்ததீர்த்தாட்சகர் சடகோபாழ்வார் அதற் குதேவதை இந்திரன் அந்ததீர்த்தத்தில் ஸ்ரீரங்கநாதரை நினைத்து ஸ் நாநம்பண்ணி தம்மால் இசைந்தமட்டும் தானதருமங்களைப் பண்ணி னால் அவர்களுக்குச் சகலபாவங்களும் அல்லாமலும் கோவதைஸ்திரீ வதை பிராமணவதை பண்ணினதோஷங்களும் நீங்கும்படி பெருமாள் கடாட்சஞ்செய்தருளுவார்.

ஏழாவது-பலாசதீர்த்தமகத்துவம்.

கேளுமையாநாரதரே அப்பால்சந்திரபுட்கரணிக்கு நிருதிமூலையி ல்காவேரிநதிக்குத் தென்மேற்கில் பலாசதீர்த்தமென்றொரு தீர்த்தமு ண்டு அந்ததீர்த்தக்கரையில் ஒருதிவ்வியமான பீவரசவிருட்சமுண்டா கிவிருக்கது அந்தமரத்தடியில் தபசுபண்ணி குமாரக்கடவுள் சத்தியா கியவேலாயுதத்தைப்பெற்றார் அந்ததீர்த்தத்துக்கு ரிஷி அகஸ்தியர் அ ந்ததீர்த்ததிட்சகர் பலராமர் அதற்குதேகத்தை குமாரக்கடவுள் அந்ததீர் த்தத்தில் எவனாகிலும் சித்தசுத்தியுடையவனாகி ஸ்நானஞ்செய்துபிரா மணர்களுக்குக் கோதானங்கொடுத்தால் அவனுக்கு மோட்சமுண்டா கும் அதுவுமல்லாமல் காமக்குரோதர்களா யிருக்கப்பட்ட துர்ச்சன காவகாசத்திலுண்டான சகலதோஷங்களும் பரிகாரமாகும்படி பெரு மாள் பிரகாசித்தருளுவார்.

எட்டாவது கடம்பதீர்த்தமகத்துவம்.

கேளுமையாநாரதரே அப்பால்சந்திரபுட்கரணிக்குநேர்வடதிசை யில்கொள்ளிடக்கரையில்கடம்பதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டுகடம் பவிருட்சத்தின்கீழிருந்து ஜனமகர்ராசன் வெகுநாள்யாகம்பண்ணிஇ ஷ்டசித்திகளையும்மோட்சத்தையும் பெற்றான் அந்ததீர்த்தத்திற்குரிஷி சனகர் கருடாழ்வார் அதற்குதேவதைச்சதுர்முகப் பிரமா அவ்விடத்தி ல்புருஷோத்தமரென்கிற பெருமாள் பிரமதேவனை நாபியில்வைத்துக்

கொண்டு பள்ளிக்கொண்டிருக்கிறார் ஆகலால் "அந்ததீர்த்தத்தில்ஸ்நானம்பண்ணி பிராமணர்களுக்கு அறுசுவை பதார்த்தங்களுடனே அன்னதானம் பண்ணுவித்தால் சகலபாவங்களும் நீங்கும் மேன்மேலும் ஒருவரிடத்தில் தானம்வாங்கின தோஷமுந் தீரும்படி பெருமாள் கிருபைசெய்வார்.

## ஒன்பதாவது அம்பாதீர்த்தமகத்துவம்.

கேளுமைபாநாரதரே அப்பால்சந்திரபுட்கரணிக்குநேர் ஈசானிய மூலையில் கொள்ளிடத்திற்கு வடபாரிசத்தில் அம்பாதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அந்ததீர்த்தக்கரையில் ஒருமாமரத்தைவைத்துப்பயிர் செய்து அந்தமரத்தின்கீழ் நெடுநாளிருந்து சூரியன் தபசுபண்ணினான் அந்ததீர்த்தத்தில் ரிஷிவசிஷ்டர் அந்ததீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப்பிராமணர்களுக்குப் பூதானம்பண்ணினால் அவர்களுக்குச் சகலபாவமும் நீங்கிவிடும் அல்லாமலும் அவர்கள் தாய்தகப்பன்செய்த பாவங்களும் பரிகாரமாகும்படி பெருமாள் கடாட்சஞ்செய்வார்.

ஆகையால் ஸ்ரீரங்கஸ்தலத்துக்குப்போய் ஸ்ரீரங்கவிமானத்தை சேவிக்க அவன்மேற்சொல்லிய நவதீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணி அந்ததீர்த்தங்களாகிய ரிஷிகளும் தேவதைகளுக்கும் பிரீதியாகிய முற்சொல்லிய தானகருமங்களைச்செய்து பிறகு காவேரிநதிக்கரையில் வந்து தேவதர்ப்பணம் ரிஷிதர்ப்பணம் பிதிர்தர்ப்பணமுதலானதுகளும் கிரமமாகச்செய்து காவேரிசலத்தைரெண்டுகையினாலுமுகந்தெடுத்து நானறிந்துசெய்தவினைகளும் அறியாமற்செய்தபாவங்களையும் பரிகரித்து அமிர்தகரமான இந்தசலம் என்சரீரத்திற் பரிசனமானவுடன் சகலசம்பத்துகளுமுண்டாகவேண்டுமென்று சங்கற்பம்பண்ணி அந்த சலத்தை சிரசின்மேற் புரோட்சித்துக்கொண்டு பிற்பாடு அந்தக்காவேரியில் ஸ்நானம்பண்ணவேண்டும்.

அதுவுமல்லாமல் எட்டுத்திக்குகளில் எட்டுதீர்த்தங்களும் எட்டு விருக்ஷங்களுமாயிருக்கின்றது இந்தச்சந்திரபுட்கரணி தீர்த்தமாத்திரம் மத்தியிலிருக்கின்றது அவனிடத்தில் ஸ்ரீரங்கவிமான ரூடராய் ஆதிசேஷசயனத்தில் பள்ளிக்கொண்டிருக்கிறார் எவனுவது அந்ததீர்த்தத்தில்முழுகினாலும் அதைக்கையினாலள்ளி சிரசின்மேல் ஸ்திரீரங்காவென்று புரோட்சித்துக்கொண்டாலும் அந்ததீர்த்தத்தை பானம்பண்ணினாலும் அதைதரிசித்தாலும் கைகளாற்பரிசித்தாலும் அதன்பெயரை வாக்கினால் வசனித்தாலும் செவிகளால்கேள்விப்பட்டாலும் அவனுக்குசகலபாவங்களும் நீங்கிப்போம்.

அல்லாமல் வேறே நகரங்களுக்குபோயிருந்து அவ்விடத்திருக்கப்பட்ட ஏரி குளங்கள்முழுகிறகாலத்தும்ஒருவன்இந்தசந்திரபுட்கரணியின்பேரைச்சொல்லிமுழுகுவானாகில்அவனுக்குமேற்சொல்லிய

தீர்த்தத்தில் முழுகினபலனே சித்தியாகும் மேற்கூறியநவதீர்த்தங்களிலும் ஒருபகல்முப்பதுநாழிகைக்குள் ஸ்நானம்பண்ணிபிரதட்சண நமஸ்காரங்கள்செய்து அப்பால் ஸ்திரீரங்கநாயகரையும் சேவைபண்ணுவானுகில் அவனும் அவன்பிறந்த வம்சத்தில் இருபத்தொருதலைமுறைகளில் வரும் புத்திரமித்திரர்களும் ஸ்திரீரங்கநாயகருடையகிருபாகடாட்சவீட்சண்யத்தில் பரமபதவாசிகளாவார்கள் மேலும் அந்த ஸ்தலத்தில் ஏகாதசிதினத்தில் உபவாசமாயிருந்து நவதீர்த்தங்களிறு முழுகிப் பிரதட்சண நமஸ்காரங்கள் பண்ணி ஸ்ரீரங்கவிமானத்தையும் பரமபாகவதர்களையுஞ்சேவித்து அன்றிராத்திரிமுழுதும் கண்ணுறங்காமலிருந்து மறுநாள் உதயகாலத்திலும் முற்சொல்லிய தீர்த்தங்களில்முழுகி ஸ்ரீரங்கநாயகருடைய சேவைசெய்துக்கொண்டு பிற்பாடு அந்தஸ்தலத்திலேயே பாரணைபண்ணினுல் அவனும் அவன்வமிசத்திலுள்ளவர்களும் வைகுந்தத்தில் நித்தியாயிசுவரியவர்களாக வாழ்ந்திருப்பார்கள் இதற்குச்சந்தேகமில்லைமேலும் அந்தஒன்பது தீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணி பிண்டபிதிர் தற்பணஞ்செய்வானுகில் அவனுடையபெருமை இவ்வளவென்று ஒருவராலும் அளவிட்டுசொல்லிமுடியாது அதுசிரார்த்தம் பண்ணினதற்கு சரிதாகும்.

ஒருவன் அந்தஸ்தலத்திலிருக்கப்பட்டபசுக்களுக்கு ஒருவாய் புல்பிடுங்கிக்கொடுப்பானுகில அவனுடையபிதுர்தேவதைகள் சிரார்த்தம்பண்ணின சந்தோஷத்தையடைவார்களென்று பரமசிவன் திருவுளம்பற்றியருளினார் அதுகேட்டு நாரதபகவானும் எழுந்திருந்து சுவாமி பரமேஸ்வரா தேவரீருடைய கிருபாகடாட்சத்தினுல் ஸதிரீரங்கமகத்துவமாகிய புண்ணியசரித்திரத்தை ஆதியோடந்தமாக ஐயந்திருபரக்கேட்டு திருத்தியனுகினேன இனிஇன்னமும ஒருவரிடத்திற் போய்க்கேட்டறியவேணடிய சநதேகமிலலை ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனுக்கு பலமுறை நமஸ்காரங்கள்பண்ணி அவருககு அர்க்கியபாத்திய ஆசனமுதலான சகலோபசாரங்களுஞ்செய்து அவரிடத்தில் விடைபெறறுக்கொணடு தம்முடைய ஆசிரமத்திற்போய்ச்சேர்ந்தார்.

இப்படிப்பட்ட மகத்துவமாகிய சரித்திரத்தைஎவனுகிலும் எழுதுவானுகில் அவனுக்குபெருமாள் சகலசுபததும அஷ்டஐசுவரியமுங்கொடுத்தருளுவார்.

அல்லாமலும் அமாவாசைபவுர்ணமிமுதலானபுண்ணியதிதிகளில் ஸ்நானசந்தியாவந்தனங்கள் முடித்துக்கொண்டு பரிசுத்தராயிருந்து அந்தசரித்திரத்தை படித்தவர்களுக்கும் கேட்டவர்களுக்கும்பெருமாள்

அஷ்டஐசுவரியமும் ஆயுராரோக்கியமுங் கொடுத்து இரட்சித்தருளுவார் அவர்களுக்குயாகாதிகிருதுதியங்கள்பண்ணினபலனுங்கிடைக்கும்

மேலும் இந்தசரித்திரத்தை விஷ்ணுதலங்களிலாவது சிவஸ்தலங்களிலாவது புண்ணியதீர்த்தங்களிலாவது படிப்பார்களாகில் அவர்களுக்குச் சகலபாக்கியங்களுமுண்டாகும்.

இந்தசசரித்திரத்தை பக்தியில்லாதவரிடத்திலும் தெய்வநிந்தை பண்ணுகிறவனிடத்திலும் சோம்பலாய கேட்கிறவனிடத்திலும் ஆசாரயீனனிடத்திலும படிக்கப்போகாது ஒருவேளை பொருள் சம்பாதிக்கிற நிமித்தம் படித்தபோதிலும் அவனுக்கும் பாவமேயல்லது புண்ணியமில்லை.

இந்தச்சரித்திரத்தைக் காமக்குரோதமில்லாத சாதுக்களிடத்திலும் சிரத்தை பக்தியுள்ளவரிடத்திலும் கேட்கவேண்டியது அப்படிப்பட்டவர்களுக்கே சொல்லவேண்டியது இந்தப்பிரகாரம் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களும் சித்த சுத்தியுடையவர்களாயிருப்பவராகில அவர்களுக்கு சகலசஞ்சித வினைகளும் விட்டுப்போய்மோட்சசம்பத்துண்டாகும்.

அல்லாமலும் இந்தசரித்திரத்தை பிராமணர்கள்கேட்டால்எக்கியஞ்செய்த பலனைப்பெறுவார்கள் க்ஷத்திரியர்கள்கேட்டால்இராஜரீகத்தைபெறுவார்கள் வைசியர்கள்கேட்டால்திரவியசம்பத்தைபெறுவார்கள் சூத்திரர்கள்கேட்டால் தேவபக்தியைப்பெறுவார்கள் சண்டைக்குப்போகிறவன்கேட்டால் செயத்தைப்பொருந்துவான்கெற்பவதியானவள் கேட்டால் நல்லபுத்திரனைப்பெறுவாள் இந்தச்சரித்திரத்தை வைத்திருக்கிறவன் சிரஞ்சுத்தியும் பக்தியும் புத்தியும் வித்தையும் சாந்தமுமில்லாதவனுயிருந்தாலும் இந்தமகிமையினால் அவன்வீடு அளகாபுரியைப்போலவும் சுவர்க்கலோகம்போலவும பிரகாசிக்கும்அவன் மறுபிறவியில புண்ணியஜென்மத்தைப்பெற்று ஸ்ரீரங்கநாயகருடைய கிருபாகடாட்சத்தினால் சகலஐசுவரியமுமபெற்றுப் பரமபாகவதனாய் ஸ்ரீவைகுந்தத்தைப் பெறுவாரென்றறிக.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீரங்கர் மகத்துவம்

## முற்றுப் பெற்றது.

---

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரிய நூல்

தமிழ்த்தாய் 67 - வெளியீடு

சிவபெருமான் நாரதமகாமுனிவருக்கு அருளிச்செய்த

# ஸ்ரீரங்கர் மகத்துவம்



Pub No : 883
ISBN : 978-93-85165-38-2
ஸ்ரீரங்கர் மகத்துவம்
50.00